உ

மதுரைச் சொக்கநாதர்

# தமிழ் விடு தூது





பண்டித வித்துவான்

தி. சங்குப் புலவர் அவர்கள்

விளக்கவுரையுடன்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.
1/40 பிரகாசம் சாலை, சென்னை—1.
1975

திருமலை வேலுக்கவிராயர் சங்குப் புலவர் (1893)



கிளைகள்

திருநெல்வேலி—6 மதுரை—1 கோயமுத்தூர்—1
கும்பகோணம், திருச்சிராப்பள்ளி—2.

கழகவெளியீடு: கககஅ

முதற்பதிப்பு திசம். 1964
மறுபதிப்புகள்: நவம் 1966 ஆக 1968, ஜூலை 1972
ஜூலை 1975

O31,IM01,1
N75

Maduraich Chockanathar

THAMIZHVIDU THOOTHU

அப்பர் அச்சகம், சென்னை—1 (I/6)

# பதிப்புரை

மலர்தலை யுலகின் மல்கிருள் அகல, விலகொளி பரப்பும் ஞாயிறு போல மாந்தர் மனவிருளகல அறிவு பரப்புவது நம் தமிழ் மொழியாம். உயர்தனிச் செம்மொழியெனப் பன்னாட்டினராலும் புகழ்ந்து பாராட்டும் பெருமையுடையதும் அதுவே. நம்மொழி நூல்கள் இலக்கியம், இலக்கணம் என இருவகைப்படும். தொல்காப்பியம், நன்னூல் முதலியவை இலக்கண நூல்கள். திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண்கீழ்க்கணக்கு முதலியவை இலக்கிய நூல்கள். இலக்கிய நூல்களிற் பேரிலக்கியம், சிற்றிலக்கியம் என்ற பிரிவும் பிற்காலத்துளவாயின. பெரியபுராணம், கம்பராமாயணம் போன்ற புராணங்களும், நல்வழி, நன்னெறி, நீதிநெறிவிளக்கம், நீதிநூல் முதலியனவும், வரலாற்று நூல் களும்; அறநூல், பொருணூல், இன்பநூல், வீட்டுநூல் என் பனவும் பேரிலக்கியமாகப் பிரித்தனர் புலவர். தெய்வங் கண்மீதும் மன்னர் வள்ளல் ஆகிய மாந்தர் மீதும் அருள் குறித்தும் பொருள்குறித்தும் பாடிய நூல்கள் அனைத்தும் சிற்றிலக்கியமெனச் செப்பத்தகும். புலவர் தந்நலங்கருதிப் பாடியவையாதலின் அவை அப்பெயர் பெற்றன போலும்.

தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்கள் உள்ளன வெனப் பேரகராதிகளிற் பெயர் காணப்படினும் சிலவே இன்று நாம் காண்பன. கலம்பகம், தூது, பிள்ளைத்தமிழ், உலா, அந்தாதி, கோவை, பரணி போல்வன அவை. தமிழ்ப் புலமை விழைவோர் சிற்றிலக்கியங் கற்றுப் பின்னர்ப் பேரிலக்கியங் கற்றலே முறைமையாம். இளமைப் பருவத்திலிருந்தே சிறுசிறு பொருள்களின் இயற்கையை யறிந்து தெளிந்தவரே பொருளறிஞரெனப் புகழப்படுவர். அதுபோலச் சிற்றிலக்கியங்களைக் கற்றுப் பேரிலக்கியங் களையும் கற்றவரே பெரும் புலவரெனப் போற்றப்படுவர்

என்பது தானே விளங்கும். தமிழ்மொழியின் சொல்லருமை பொருளருமை யுணர்வதற்குச் சிற்றிலக்கிய நூல்களும் வேண்டுவனவாம். ஆதலால் அரசியலாரும் புலவர் வகுப்பு வித்துவான் வகுப்பு மாணவர்கட்குப் பாடமாகச் சிற்றிலக்கியங்களையும் வகுத்து வைப்பது நாம் கண்ட உண்மையாம். தூது என்பதும் ஒருவகை நூல்.

தூது என்பது, ஒரு தலைவனைக் கண்டு காதல் கொண்ட மங்கையொருத்தி, தன காதலை உயர்திணைப் பொருள்களிடத்தேனும் அஃறிணைப் பொருள்களிடத்தேனும் எடுத்துக் கூறித் தூது செல்லுமாறு ஏவும் பொருளமைந்தது. "இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை, பயம்பெறுமே கம்பூவை பாங்கி - நயந்தகுயில், பேதைநெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" எனத் தூதுவிடுதற்குரிய பொருள்களிற் பாங்கியாகிய உயர்திணைப் பொருள் கூறப்பட்டுள தெனினும் பாங்கிவிடுதூது பாடினோரெவரும் இலர். அஃறிணைப் பொருள்களைக் கூறிவிடுத்த தூது நூல்களேயுள்ளன. இன்ன பொருள்களைத்தாம் தூதுக்குரிய பொருள்களாக எடுத்துரைக்க வேண்டும் என்ற வரையறையும் அமைத்திலர். புகையிலையைப் பொருளாக விடுத்த தூது நூலும் இருப்பதாகத் தெரிகிறது.

மதுரைச் சொக்கநாதர் மேற் காதல் கொண்ட தலைவியொருத்தி தமிழைத் தூதுவிடுத்ததாகப் பொருளமைத்துப் பாடிய நூல் "தமிழ் விடுதூது" என்பதாம். இந்நூலியற்றிய ஆசிரியர் இன்னர் எனப் பெயரகூடப் புலப்பட்டிலது. ஆயினும் செந்தமிழ்ப்பற்றும் தெய்வப்பற்றும் சைவப் பற்றும் செறிந்த வுள்ளத்தவர் என்பது மட்டும் நன்கு விளங்குகின்றது.

இந் நூலினை முதலில் ஏட்டிலிருந்து அச்சிற்குக் கொண்டுவந்த பெருமை டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரவர்களைச் சார்ந்ததே. அச்சேறிய காலமுதல் இதுகாறும் அவர்கள் குறிப்புரையுடன் உலவியது. புலவர் வகுப்பு

வித்துவான் வகுப்புகட்குப் பாடமாக அரசியலார் அமைப்பது கண்டு விளக்கவுரை வரைந்து வெளியிடின் நற்பயன் விளையும் எனக் கருதினம். எம் கழகப் புலமையாளராகிய சங்குப்பும் வரை உரை வரைந்துதவுமாறு கூறிப்பெற்று இந் நாளில் வெளியிடுகின்றோம்.

இந்நூலிற் கண்ணிகளைச் சீர்பிரித்துத் திருத்தமாகப் புதுக்கியதுடன் பொழிப்புரையும் விளக்கமும் மேற்கோளும் கதைச் சுருக்கமும் வரையப்பட்டுள்ளன. தமிழ்ப்பற்றுடையார்க்கும் பயிலு மாணவர்கட்கும் இந் நூல் பெரிதும் பயன் படும் என்பது எம் கருத்து. கழகவாயிலாக இந்நான் வெளிவருகின்றது புதுமையாகத் "தமிழ் விடுதூது" என்னும் இந்நூல்.

அன்பர் பலரும் அருமை பெருமையறிந்து தமிழ் மொழியைப் போற்ற இந் நூல் தகுதியுடையதே. மாணவர் களும் ஆசிரியர்களும் வாங்கியும் வாங்குவித்தும் நற்பயன் பெறுக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

## தூதுநூலின் இயல்பு

செந்தமிழ் மொழியின்கண்ணுள்ள சிற்றிலக்கிய நூல்களுள் தூது என்பதும் ஒன்று. இஃது ஒரு தலைவன்மேற் காதல் கொண்டு தலைவி தன் காதல் நோயின் துயரத்தைக் காதலனுக்கு எடுத்துக் கூறி "மாலை வாங்கி வா" "தூது சொல்லி வா" என்று உயர்திணைப் பொருள்களையேனும் அஃறிணைப் பொருள்களையேனும் விடுத்ததாகப் பொருளமைத்துப் புலவர்களாற் பாடப்படுவதொன்றும். காதலனும் காதலிக்குத் தூது விடுவிப்பதும் உண்டு எனினும் காதலி விடுத்த தூது நூல்களே பெரும்பாலும் காணப்படுகின்றன. 'விறலிவிடு தூது' என்பதே ஆடவன் விடுத்த தூது நூலாகத் தோன்றுகிறது. அதுவும் காதற் பொருள் கூறாது புலவன் தான் பரத்தையருடன் கூடிக் கேடடைந்த செய்தியை விறலிபாற் கூறி மனைவியின் ஊடல் நீக்குமாறு விடுத்ததாகப் பொருளமைந்துள்ளது. இதுபோல ஆடவன் விடுத்த தூதுப் பொருள் அமைந்த நூல் காண்பதரிது. மங்கையர் தம் காதல் கூறி விடுத்த பொருளமைந்த நூல்களே எங்கணும் காணப்படுவனவாம்.

## தூதின் இலக்கணம்

தூது நூல் பாடுவதற்கு இலக்கணம் "பயிறருங் கலிவெண்பாவினாலே, உயர்திணைப் பொருளையு மஃறிணைப் பொருளையுஞ், சந்தியின் விடுத்தல் முந்துறு தூதெனப் பாட்டியற் புலவர் நாட்டினர் தெளிந்தே" என்ற (இலக். வி. 874) நூற்பாவாலும் உரையாலும் அறியலாம். உயர்திணைப் பொருள்களிற் பாங்கி யொருத்தியே தூது பகர்தற்குத் தக்கவள் எனக் கூறியிருப்பினும் "பாங்கி விடு தூது" என்ற நூல் ஒன்றுங்கூடக் காண்கிலம். அஃறிணைப்பொருள்களை விடுத்த தூதுநூல்களே மிகுந்

துள்ளன, 'இரத்தினச்சுருக்கம்' என்ற நூலிற் காதலர்க்குத் தூது விடுக்கும் பொருள்களாக வகுத்துரைத்த பொருள்கள் "இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை, பயம் பெறுமே கப்பூவை பாங்கி—நயந்தகுயில், பேதைநெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை' இவை எனினும் பிற்காலத்தார் அவற்றையே தூதுக்குரிய பொருள்களாகக் கொண்டனர் எனக் கூறுவதற்கும் இடனின்று. வனசவிடு தூது, நெல்விடு தூது, பணவிடு தூது, மானவிடு தூது, துகில்விடு தூது போன்ற நூல்கள் பல காண்கின்றோம். புகையிலைவிடு தூதும் அச்சிட்டு டாக்டர் உ. வே. சா. அவர்கள் குறிப்புரை வரைந்துளளனர். அறிவாற்றல் சான்ற புலவர்கள் தம் மனத்தெழுந்த ஆர்வத்தால் ஒரு தலைவனைச் சிறப்பிப்பதற்கும் தாம் விழைந்த பொருளைப் புகழ்வதற்கும் எடுத்துக் கொண்ட இலக்கியமாகவே தூது நூல் தோன்றுகிறது. காவியம், புராணம், கலம்பகம், அந்தாதி இவை போன்ற இலக்கியங்களின் இடையே தூதுப் பொருளமைந்துள்ளமையும் அறியலாம். சிந்தாமணியிற் குணமாலை என்பவள் சீவகன்பாற் கிளியைத் தூது விடுத்த பொருளமைந்துள்ளது. பெருங்கதையிலும் வாசவத்தை பிரிவாற்றாமையால் வருந்தி மான் முதலிய அஃறிணைப் பொருள்களை விளித்துத் தூது கூறி வருமாறுரைத்த பொருட் பகுதியும் உள்ளது (3. 2. 143—286) காண்க.

### கலம்பகத்தில் தூது

"மஞ்சுகா ளுங்களைப்போன் மாரன்பூ மாரிபெய்ய
விஞ்சியது பேராசை வெள்ளங்காண்—டஞ்சம்
வழுத்திர் மதிச்செங்கண் மாலலங்கா ரற்கு
வழுத்திர் மதிச்செங்கண் மால்"

என மேகத்தை விடுத்ததாகப் பொருளமைத்த கவி கலம்பகத்தில் வந்தது காண்க. கலம்பக நூலின் உறுப்புகளில் மேகவிடு தூதும் ஒன்றாகும். ஆதலின் தூதுப் பொருளமைந்த கவி அந் நூலிடை யமைந்தே யிருக்கும் என அறிக.

## தூது வந்துள்ள நூல்கள்

தேவாரம், திருவாய்மொழி, திருவாசகம் போன்ற துதிப் பாடல்களினும் சிற்றின்பப் பகுதியமைந்து தூது விடுக்கும் பொருளும் அமைந்துள்ளமை அறியலாம். "வண்டரங்கப் புனற்பொன்னி மதுமாந்திப் பெடையினொடும் ஒண்டரங்க விசைபாடு மளியரசே யொளிர் திங்கட், டுண்டரங்கப் பூண்மார்பர், திருத்தோணி புரத்துறையும், பண்டரங்கர்க் கென்னிலைமை பரிந்தொருகாற் பகராயே" என, வண்டினை நோக்கிக் கூறிய பொருளமைந்த பாடல் காண்க. இதுபோன்ற பல பாடல்கள் உள்ளன. அவற்றுள், தூது அகப் பொருட் பகுதியன்று. புறத்திணைத் துறையாம். தெய்வத்தைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட நூல் கடவுண்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கத்தின் பாற்படும். மக்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட நூல் மானிடர்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கத்தின் பாற்படும்.

## தமிழ் விடு தூது

மதுரைச் சொக்கநாதர் தமிழ்விடுதூது என்பது மதுரையிற் கோயில் கொண்டு வீற்றிருக்கும் சொக்கநாதர் என்ற தெய்வத்தின்மேற் காதல் கொண்ட காரிகை யொருத்தி, தன் காதல்நோயைக் கூறிவருமாறு தமிழ் மொழியைத் தூது விடுத்த பொருளமைந்தது. ஆசிரியர் பெயர் காலம் அறியப்படா நூல் இது. நூலின் சொற் சுவையும் பொருட் சுவையும் ஆசிரியர் புலமைத் திறத்தை விளக்குகின்றன. இந்நூலின் அமைப்பை ஆய்ந்தால் செந்தமிழ்ப்பற்றுடையவர்; பரந்த தமிழ்நூற் பயிற்சியும் கேள்வியும் உடையவர்; சிவபெருமானிடத்தும் அவனடியா ரிடத்தும் பேரன்பு வாய்ந்தவர்; திருவிளையாடல்களில் ஈடு பட்டுச் சிந்தையுருகி நின்றவர்; சைவப் பற்றே தனிப் பற் றெனக் கொண்டவர்; வடமொழி நூல்களும் பயின்றவர். "தாமின் புறுவ துலகின் புறக்கண்டு காமுறுவர் கற்றறிந் தார்" என்ற குறட்பொருட் கேற்ப வாழ்வு நடத்தியவர்

என அவர் பண்புஞ் செயலும் புலப்படும். சைவப் பற்றும் தமிழ்ப் பற்றுமே இந்நூல் பாடுவதற்குக் காரணமாய் உள்ளத்துள் நின்றன வெனக் கொள்ளலாம். இந் நூலாசிரியர், சொக்கநாதர்பாற் காதல் கொண்ட தலைவியாகவும், தமிழ் மொழிப் பாங்கியின் தலைவியாகவும் காட்சியளிக்கின்றார். ஆசிரியர் தலைவியாகவே அமைந்து கூறுமாறு காண்க.

### தமிழே தேவர், மூவர், பாவலர் என்பது

இந்நூலின் முதல் நான்கு கண்ணிகளில் சோமசுந்தரர், தடாதகைப் பிராட்டியார், கணபதி, முருகவேள் ஆகிய நால்வரையும்; பின்னுள்ள நான்கு கண்ணிகளில் (5 - 8) ஞானசம்பந்தர் முதலிய நால்வரையும்; அவர்க்குப்பின் அகத்தியர் தொல்காப்பியர் முதலிய தமிழ நூல் இயற்றிய பாவலர் பலரையும் (9 : 15) எடுத்துரைத்து ''எல்லாரும் நீயா யிருந்தமையால்'' எனத் தமிழ வடிவமாகவே சுந்தரர் முதலிய மூவரும் தேவரும் முனிவரும் இருக்கின்றார் எனக் காட்டுகின்றார். பின் "என்னடிகளே'' என்று தமிழை விளித்து முன்னிலைப் படுத்துகின்றார். நாலே! பாவே! கலையே! செந்தமிழே! செய்யுளே! என்று போற்றுகின்றார் (17 - 18)

### தமிழின் பிறப்பும் வளர்ச்சியும்

ஒரு குலத்திலும் பிறவாமலும் இறவாமலும் உயிர்க்குயிராய் நின்றாய் எனத் தமிழி னியற்கையைப் புலப் படுத்தும் பகுதி போற்றத்தக்கது (19). எழுத்துகள் பிறக்கு முறையை மக்கள் பிறக்குமுறைபோல வளிதரித்து, கருப்பமாய், வண்ணத் துருவாய், நனிபிறந்தாய் என வகுத்திருப்பது தமிழ் இலக்கண நுட்பத்தை எடுத்துரைத்ததாம் (20 - 22). ஈராறெனும் பருவஞ் செய்து, தொட்டிற் கிடத்தித், தாலாட்டி, மஞ்சட் குளிப்பாட்டி, மையிட்டு, முப்பாலும் புகட்ட வளர்ந்தாய் என்று தமிழ் மொழியைப் பண்டைக்காலம் ஏட்டில் வரைவதையும் கணக்காயர் சிறார்க்குக் கற்பித்துக் கல்வி வளர்ப்பதையும் கண்டு பிள்ளை

கள் வளர்க்கு முறைபோலத் தோன்றுமா றமைத்த சொல்லாற்றல் பெரிதும் வியக்கற்பாலதே (23-25). வளர்ந்து பின்னர் மாப்பிள்ளையாய்ப் பண்கள் ஆகிய பட்டத்துத் தோகையரை மணந்து கல்யாணப் பாவையராகக் கொண்டு நவரசமாம் பிள்ளைகளைப் பெற்றுப் பெருவாழ்வு பெற்றாயே! கொலுவில் வீற்றிருக்கப் பெற்றாயே! வாழ்வெலாம் கண்டு மகிழ்ந்தாயே! என்று மக்கள் வாழ்வுபோலத் தமிழ் வாழ்வினையும் உருவகப்படுத்திக் காட்டிய அருமை காண்க (29-34).

## தமிழினைச் சக்கரவர்த்தியென்பது

இனி, தமிழ்மொழியைச் சக்கரவர்த்தியென உருவகமாக்கி (46) பத்துத் திசையிலும் நின் செங்கோல் செல்லாத திசையில்லை; ஐம்பத்தாறு தேயத்துள் சிங்களம் சோனகம் முதலிய பதினேழ் நிலத்து மொழிகளும் சிற்றரசர்; குடகடல், கீழ்கடல், குமரியாறு, வடவரை நினக்குரிய எல்லைகள்; இடையேயுள்ள தென்பாண்டி குட்ட முதலிய பன்னிருநாடுகளும் நின்டாற்பட்டன; அந்நாட்டுள் வையை கருவை மருதாறு, மருவூர் ஆகிய இவற்றின் நடுவே நினக்கு அரண்மனையுள்ளது: நீ பெரிய பார்வேந்து; வடமொழி வேதாகமங்கள் எல்லாம் நின் புரோகிதர்கள்; பெருங்காப்பியங்களும் நாடகமும் அலங்காரமும் நின் தோழர்கள்: சாத்திரங்களெல்லாந் தானபதிகள்; பாரதமும் பதினெண் புராணங்களும் நின் படைகள் என்று சக்ரவர்த்திக்குத் தக்கவாறு வகுத்துக் காட்டிய வன்மை கண்டுகண்டு புலவர்கள் களிகூரும் பான்மைத்தாம் (36-46). எழுத்து வருத்தனம் சக்கரக்கவி, தேர்க்கவி, சுழிகுளம், கூடசதுக்கம், மாலைமாற்று, சதுரங்கபந்தம், முரசபந்த முதலிய சித்திரப்பாவின் பெயர் வெளியே தோன்றப் பொருள் வேறமைத்து வாசங்கமீது இருந்தாய் என்று சங்கப் பலகையின் மேல் தமிழ் இருந்த காட்சியை எடுத்து விளக்கியது எவர்க்கும் இறும்பூது விளைக்கு மன்றோ! (46 - 49) மூவர் பதிகங்களும், வாதவூராளி திருவாசகமும் திருக்கோவையாரும் காரைக்காலம்மையார் பாடிய இரட்டை மணிமாலையும், இலக்கண

நூற்பாவும், பஞ்சகாப்பியமும், பெருங்காப்பியமும், பொன் வண்ணத் தந்தாதியும், மும்மணிமாலையும், பட்டினத்தார் பாடிய மும்மணிக் கோவையும், பத்துப்பாட்டும், எட்டுத் தொகையும், பதினெண் கீழ்க்கணக்கும், இரட்டையர் பாடிய கலம்பகமும், கலிங்கத்துப்பரணியும், ஒவ்வொரு கண்ணிக்கும் ஒவ்வோர் ஆயிரம் பொன் பரிசளிக்கப்பெற்ற சோழன் உலாவும் பிள்ளைத்தமிழும் ஆகிய நூல்களையடுக் கடுக்காகக் கூறித் தமிழரசற்கு மெய்க்காப்பாளராக அமைத்த விதம் தமிழ் நூலில அவர் வைத்திருந்த ஆர்வத் தைப் புலப்படுத்துகின்றது (50 - 60) "அரியாசனமுனக்கே யானு லுனக்குக், சரியாரு முண்டோ தமிழே" என்ற கருத்து ஆராயத் தக்கது. டாக்டர் உ.வே சா. அவர்கள் "அரியாசனம் - சிங்காதனம்; அரிந்த பனேமேடாகிய ஆசன மாம். இக்கண்ணி 'அரியாசனத்தி லரசரோடென்னைச் சரியா சனம்வைத்த தாய்' (தனிப்) என்றதை உட்கொண்டு இயற்றப்பட்டது போலும்" எனக் குறிப்பு வரைந்துள்ளார். இஃது ஆங்கிலமொழியரசு வந்த காலத்தெழுந்த நூலோ என்னும் ஐயத்தை எழுப்புகின்றது. தமிழ்மொழியாகிய நீ யரியணையேறி யமர்ந்தால் உனக்குச் சரியான மொழி யொன்றுமின்றும். உன் ஆட்சியில்லாக் குறை யொன்றே யுளது எனச் சுட்டியதுபோலத் தோன்றுகிறது. அறிஞர் ஆய்க.

### தமிழ்ப்பயிர் வளர்த்தல்

வெண்பா முதலிய நான்கு பாக்களையும் வயல்வரம் பாகவும், அப் பாவினினங்களை மடைப்போக்காகவும், மன முதலிய நாற்கரணங்களையும் ஏராகவும் புலவர்களை உழவ ராகவும், நான்கு நெறிகளை விதையாகவும். அறமுதலிய நாற்பொருள்களை விளைபயனாகவும், கல்லாத புல்லர்களைத் தமிழ்ப் பயிர் வளர்வதைத் தடுத்து நிறுத்தும் களைகளா கவும், பிள்ளைப் பாண்டியன், வில்லி ஒட்டக்கூத்த முனிவர் களை அக் களை களையும் செயலாளர்களாகவும் உருவகப் படுத்தித் தமிழ்ப் பயிர் தமிழ் நாட்டில் வளர்த்த முறையைத் தோற்றுவித்த புதுமையை எங்ஙனம் புகழ்வது! (63 - 68)

பாடலிற் பொருட் சுவைகாணும் வகைக்குப் பாலும், முந்திரிகையும், வழைக் கனியும், கரும்பும்,நாளிகேரமும் உவமையாக வகுத்துக் காட்டிய காட்சி வடமொழியை யொட்டியது போலும். இவ்வாறு சிறப்பித்து "முத்திக் கனியே,யென் முத்தமிழே, புத்திக்கு ளுண்ணப் படும்தேனே' என்று விளிப்பது கற்றோர் மனத்தையுருக்குஞ் சொற்றொடராம் (69-70).

## தமிழ் எல்லாப் பொருளினும் உயர்வுடையது

"விண்ணப்ப முண்டு விளம்பக்கேள்" என்று கூறத் தொடங்கியவர் பின்னும் தமிழார்வத்தாற் புகழ்ச்சி இகழ்ச்சிபோலத் தோன்றுமாறு பலபடப் புனைகின்றார். சிந்தாமணி நீ உன்னைச் சிந்து என்று சொல்வது தகாது என்ற கருத்து நொண்டிச் சிந்து, காவடிச் சிந்து எனப் பெயர் பெற்ற பாடல்களைக் குறிப்பதுபோலும். உயர்ந்த பொருள்களினும் தமிழ் உயர்வுடைய பொருள் என்பதைப் புலப்படுத்த, மூவர் தேவரும் முக்குணமேயுடையவர், நீயோ பத்துக்குணமுடையை; ஐந்து வண்ணங்களே எப்பொருளிடத்தும் அமைந்துள்ளவை; நின்பால் நூறு வண்ணங்கள் அமைந்துள்ளன. ஆறுசுவைதாம் நாவிலறியப்படுவன. செவியாலறியப்படும் ஒன்பான் சுவையும் நின்பாலுள்ளன. ஒன்றே வனப்புள்ளது. எப்பொருளிடத்தும் எட்டு வனப்பு நின்பா லியைந்துள்ளன. அரசர்கள் பொருள்கோள் வகை மூன்றே. நீ எட்டுவகைப் பொருள்கோள் இயைய விளங்குகின்றாய்; ஆண்பால், பெண்பால், அலிப்பால் என மூன்றே உலகிலுள்ளன; நீயோ முப்பாலும் அன்றி ஐம்பாலும் பெற்றுள்ளாய்; சீர் முப்பதும் பெற்றனை எனச் சிறப்பித்துப் பாராட்டிய செயல் புலமைத்திறத்தைப் புலப்படுத்துகின்றன (73 - 78). தனை, வெண்பா, கலிப்பா, மருட்பா, விருத்தம் என்ற சொற்களுக்கு வேறுபொருள் தோன்றப் பொருத்தமற்றவை யெனப் பொருத்திக்காட்டிய நுண்ணறிவினை நோக்குக (79 - 83). மண்ணிற் புகழ் வடிவமாக மக்கள் வாழ்வதற்கும் விண்ணில் தேவராக மேவுதற்கும் தமிழ்மொழியே துணையாம்; தமிழுணரா மாந்தர் யமனுல

கமே சேர்வர் எனச் சாற்றியது மொழிப்பற்றின் முதன்மை யுடையவர் என்பதை நன்கு விளக்கும் (89 - 90). ஈசருமயர்ந் தாரோ உன் சங்கத்தால், நீ யுயர்ந்தாயோ அவர் சார்ந்த தனுல், வாணி அங்கைமேல் நீ யமர்ந்தாயோ, உன் மேலவள் அமர்ந்தனளோ, நீ திருமாலைத் தொடர்ந்தாயோ, அவர் உன்னைத் தொடர்ந்தாரோ, முருகர் சொன்னரோ, உன்னை; நீ சொற்றனையோ அவர்க்கு; மதுரைவாசருனக்குப் பொருளாய் வந்தாரோ, அவர்க்குப் பொருளாய் நீ வந் தாயோ என்று ஐயமுற வமைத்தவையெல்லாம் தெய்வம் நீயேயெனத் தமிழுக்குத் தலைமை தோற்றுவித்தன (91-95).

## பெண் பெருமை

திருவாரூர்த் தியாகப்பெருமானைத் தூது போக்கும் பெருமையுடைய நின்னைத் தூதுக்குச்செல் என்று கூறு வது எத்துணைப் பேதைமை! வருத்தத்தாற் கூறியதாக மதிப்பாய். பெண்மதியென் றெண்ணுதே என்று தலைவி கூறுவதாக அமைத்திருப்பது உலகியல்புணர்ந்தவர் என் பதை உணர்த்துகின்றது. பெண்களெல்லாம் வாழ நீ பிறந்தாய் என்பதறிந்தே நின்பாற் கூறுகின்றேன் என்று தமிழ்ப் பெண்கட் குதவியாய் நின்ற செயல்களை யெடுத்துக் காட்டிப் பெண்ணுலகிற்குப் பெருமையளித்ததும் காண்க (101—106).

## தூதுக்குரிய பொருள்கள்

அன்னம், வண்டு, மான், கோகிலம், மனம் ஆகிய தூதுக்குரிய பொருள்களைக் கூறி அவை சொக்கநாதர் பாற் சென்று தூது சொல்லா எனக் காரணங் காட்டி மறுத்துரைக்கின்றுர் (107—111). "கொங்குதேர்" என்று பாடியதும் நக்கீரருடன் வசைபாடிச் சொற்போர் விளைத் ததும் அகப்பொருள் பாடியதும், வடமதுரைக்கு வந்ததும், காரியார் நாரியார்க்குக் காட்டுள் வந்ததும், பாணபத்திரன் பொருட்டு விறகு சுமந்ததும் பலகை தந்ததும், இசைவாது வொன்றதும், சீட்டுக்கவி யளித்ததும் ஆகிய சிவபெருமான் செயல்களையெல்லாம் தமிழின் செயலாகக் காட்டிச் சொக்கர்

உனக்குள்ளன்றோ என்று ஒன்றுபடுத்திய சித்திரம் எண்ணி எண்ணி வியக்கற்பாலதொன்றும்.

### பூசைப் பொருள்களாகச் சிறந்தவை

பூசலார் சமைத்த கோயில், கண்ணப்பர் உமிழ்ந்த திருமஞ்சனம், திருக்குறிப்புத் தொண்டர் அளித்த பரிவட்டம், மானக்கஞ்சாறனார் சாத்திய பஞ்சவடி, மூர்த்தியார் சேர்த்த குருதிச் சந்தனம், மாறனார் படைத்த விருந்தமுது, சிறுத் தொண்டர் இட்ட பிள்ளைக்கறி, தாயனார் தந்த மாவடு, கணம்புல்லர் ஏற்றிய திருவிளக்கு இவை போன்ற பூசைக்குரிய அருமைப் பொருள்கள் படைத்துப் பூசைசெய்ய யாரால் இயலும்? ஆரூரர்க்காதியிலே பாட்டேயர்ச்சனைக்காகு மென்றார். ஆதலால் நீ அவர் சொற்படி செய்தாய். நீ வைதாலும் அவர்க்கு வாழ்த்தாகவே செவியிலேறும் என்பது மெய்தான் எனக் கண்டேன் என்று தமிழை வியந்து கூறும் பகுதியும் (140—150) பாவலர் மனத்தைக் கவர்வதாம். இருந்தமிழே யுன்னாலிருந்தேனிமையோர் விருந்தமிழ்தமென்றாலும் வேண்டேன் (151) என்ற அடிகள் படித்துப் படித்து இன்புறும் பண்பு வாய்ந்தன.

### காதல்நோய் கொண்டாள் கூற்று

ஆனை தின்ற விளங்கனியானேன், கல்லானை தின்ற கரும்பானேன், தேம்பினேன்; பனியால் வாடிய செந்தாமரையொத்தேன், வெள்ளக் கொள்ளை கடந்தாய் நீ, மால் வெள்ளங் கடத்திவிட வேண்டாவோ! சாக்கியரைக் கழுவேறச் செய்தாய், வேளையது செய்மாயோ! பாண்டியன் கூனொழித்தாய் நீ மதன கரும்பின் கூனொழியச் செய்யாயோ! வெப்பு நோய் தீர்த்தாய், என் காமவெப்பு நோய் தீர்க்க விரும்பாயோ! நஞ்சினை யமுதாக்கினை: இன்று சமைத்த உணவாகிய நஞ்சினை யமுதாக்காயோ! தீக்குள் வேவாதிருந்த நீ, காமத்தீ என்னைச் சுடாதிருக்கச் செய்யாயோ! கொங்கிற் பனியால் அடியார் வாடாது செய்த நீ, நான் பனியால் வாடாதிருக்க மனமிரங்காயோ!

கடல் கொல்லாதபடி அப்பரைக் கல்லின்மேல் மிதக்க விட்டாய், என்னைக் கடல் கொல்லாமல நீனுெடுற வாக்காயோ! ஆண் பனையைப் பெண் பனையாக்கினை, அன்றிற் பறவையை வேருெரு புள்ளாக்காயோ! தென்றலுனக் குறவாயது போல எனக்கும் உறவாக்காயோ! பாடும் பண்ணெல்லாம் உன் பாவையாகக் கொண்டாய், அப் பண்கள் என்னைச் சினவாதிருக்குமாறு கூருயோ! முத்துப் பந்தர் முதலியவை கொண்டாய், அம் முத்துச் சுடாதிருக்கச் செய்வாயோ! அங்கத்தைப் பூம்பாவை யாக்கினய், என் அங்கத்தையும் அவ்வாறு செய்யாயோ! முதலை வாய்ப் பிள்ளையை வருவித்தாய், என் உயிரையும் வருவிக்கவில்லை நீ என்று காதல் கொண்ட தலைவி தமிழின்பாற் கூறுங் கூற்றுக்கள் கன்மனத்தையும் கரைப்பனவாம். இப் பகுதியில்-வேள், அவன் கருப்புச் சிலை, காம வெப்பம், உணவை வெறுத்தல், காமத்தீச் சுடுதல், பனியால் வாடுதல், கடல் பகையாயொலித்தல், அன்றில் பனை மேலிருந்து அரற்றல், தென்றல் பகையாய் வந்து மோதுதல், பண்கள் பகையாதல், முத்துக்கள் உடலிற் பட்டுச் சுட்டு வருத்துதல், அங்க மெலிந்து என்பதால் ஆகிய காமவிகாரங் கொண்ட காரிகையார் செயலும் விளங்குவது காண்க (155—167).

வழி கூறுவது

திருஞான சம்பந்தர் முதலிய மூவரும் காரைக்காலம்மையாரும் வெள்ளானைமேற் கொண்ட வித்தகரும் கழறிற்றறிவாரும் நீயே யாதலால் "உன்கையி லாகாத தொன்றுண்டோ" (170—177) என்றும் உரைக்கின்ருர். பின்பு மதுரைக்குச் செல்லும் வழி கூறுவது போலக் கூறி எவ்வழிச் சென்ருலும் காரியஞ் சித்திக்குமே, நான் சொல்லுவதென்? என்று கூருது விடுக்கின்ருர். கல்லாத மூடர்பாற் றங்காது நல்லார்பாற் றங்கி மதுரை சேர்க. வான்மேலுயர்ந்த மதில் கடந்து திருவீதி சூழ்வந்து திருக்கோயிலுட் புகுந்து தென்பா னின்று வணங்கி அபிடேக முனியமைத்த தளவிசையும் மண்டபமும் கோபுரமுங் கண்டு களிகூர்ந்து திருவோலக்கம் காண்க எனச் செப்புகின்ருர்.

### வணங்கு முறை

பின்னர்த் தேவரு முனிவரும் யாவரும் புடைசூழ நின்று பணியும் திருமுன் பொருக்கெனப் போய்ப் புகுந்து திருவடிமுதல் மணிமுடிவரை உற்று நோக்கித் திருத்தாளை முடிமேற் சூடித் தீபமெதிராகச் சேவிக்குங் காலத்துப் பல தேவருடனே கூடித் துதித்து நில் முக்கட் கனியே! முழு முதலே! துரையே! செல்வமே! கோமானே என்றெல்லாம் புகழ்ந்து பொன்னனையாள் வீட்டிற் புகுந்திருந்தவர்க்கு என் பொன்னனையாள் வீட்டிற் புகுதல் ஏன் பொருந்தாது என்று திருச்செவியி லேறும்படி யுரைத்துத் தூதுசொல்லி வா வென்று முடிக்கின்றார்.

### முடிவுரை

இவ்வரிய நூலுள் மதுரையில் நடந்த திருவிளையாடற் செய்தி பல அமைந்துள்ளன; இடையிடையே சிலேடை, மடக்கு என்ற சொல்லணிகளும் உவமையுருவகம் முதலிய பொருளணிகளும் பொதிந்து நிற்பன காணலாம். திருக்குறட் கருத்துகள் பல செறிந்து காணப்படுகின்றன. திருக்குறட் பாவினையே யமைத்த கண்ணியும் சில உள்ளன. செந்தமிழின் சிறப்பை எடுத்துக் கூறிய நூல்களில் இத் தமிழ விடுதூது போல் ஒன்றும் இல்லை. தமிழ்ப் பெருமையும் சைவ சமயத்தின் அருமையும் தமிழ்க்கும் சைவத்துக்கு முள்ள தொடர்பும், செந்தமிழ் அருமை தெரியச் சிவபெருமான் புரிந்த திருவிளையாடல்களும் இன்னோரன்ன பிறவும் இந்நூலால் இனிது விளங்கு கின்றன.

சென்னை
31—10—64

தி. சங்குப்புலவர்.

உ

திருச்சிற்றம்பலம்

## மதுரைச் சொக்கநாதர்

# தமிழ் விடு தூது

—:o:—

(கலிவெண்பா)

1. சீர்கொண்ட கூடற் சிவராச தானிபுரத்
தேர்கொண்ட சங்கத் திருந்தோரும்—போர்கொண்

2. டிசையுந் தமிழரசென் றேத்தெடுப்பத் திக்கு
விசையஞ் செலுத்திய மின்னும்—நசையுறவே

3. செய்யசிவ ஞானத் திரளேட்டி லோரேடு
கையி லெடுத்த கணபதியும்—மெய்யருளாற்

4. கூடல் புரந்தொருகாற் கூடற் புலவரெதிர்
பாடலறி வித்த படைவேளும்—விடகலா

5. மன்னுமூ வாண்டில் வடகலையுந் தென்கலையும்
அன்னைமுலைப் பாலி னறிந்தோரும்—முன்னரே

6. மூன்றுவிழி யார்முன் முதலையுண்ட பிள்ளையைப்பின்
ஈன்றுதரச் சொல்லி னிசைத்தோருந்—தோன்றயன்மால்

7. தேடிமுடி யாவடியைத் தேடாதே நல்லூரிற்
பாடி முடியாப் படைத்தோரும்—நாடிமுடி

8. மட்டோலைப் பூவனையார் வார்ந்தோலை சேர்த்தெழுதிப்
பட்டோலை கொள்ளப் பகர்ந்தோரும்—முட்டாதே

9. ஒல்காப் பெருந்தமிழ்மூன் றோதியருண் மாமுனியும்
தொல்காப் பியமொழிந்த தொன்முனியும்—மல்காச்சொற்

10. பாத்திரங்கொண் டேபதிபாற் பாய்பசுவைப் பன்னிரண்டு
சூத்திரங்கொண் டேபிணித்த தூயோரும்—நேத்திரமாம்

11. தீதில் கவிதைத் திருமா லிகைத்தேவர்
ஆதி முனிவ ரனைவோருஞ்—சாதியுறும்

12. தந்திரத்தி னாலொழியச் சார்வினையைச் சாற்றுதிரு
மந்திரத்தி னாலொழித்த வல்லோரும்—செந்தமிழிற்

13. பொய்யடிமை யில்லாப் புலவரென்று நாவலர்சொல்
மெய்யடிமைச் சங்கத்து மேலோரும்—ஐயடிகள்

14. காடவருஞ் செஞ்சொற் கழறிற் றறிவாரும்
பாடவருந் தெய்வமொழிப் பாவலரும்—நாடவருங்

15. கல்லாதார் சிங்கமெனக் கல்விகேள் விக்குரியர்
எல்லாரு நீயா யிருந்தமையாற்—சொல்லாரும்

16. என்னடிக ளேயுனைக்கண் டேத்தினிடர் தீருமென்றுன்
பொன்னடிக ளேபுகலாப் போற்றினேன்—பன்னியமென்

17. பஞ்சிபடா நூலே பலர்நெருடாப் பாவேகீண்
டெஞ்சியமுக் கோது வியற்கலையே—விஞ்சுநிறந்

18. நோயாத செந்தமிழே சொல்லே குழவரகந்
தீயாது சொல்வினையுஞ் செய்யுளே—வீயா

19. தொருகுலத்தும் வாரா துயிர்க்குயிராய் நின்றாய்
வருகுலமோ ரைந்தாயும் வந்தாய்—இருநிலத்துப்

20. புண்ணியஞ்சே ருந்திப் புலத்தே வளிதரித்துக்
கண்ணிய வாக்காங் கருப்பமாய்—நண்ணித்

21. தலைமிடறு மூக்குரத்திற் சார்ந்திதழ்நாத் தந்தம்
உலைவிலா வண்ணத் துருவாய்த்—தலைதிரும்பி

22. ஏற்பமுதன் மூப்பதெழுத் தாய்ச்சார் பிருநூற்று
நாற்ப தெழுத்தா நனிபிறந்தாய்—மேற்படவே

23. எண்முதலா கப்பகரு மீரா றெனும் பருவம்
மண்முதலோர் செய்து வளர்க்குநாட்—கண்மணிபோற்

24. பள்ளிக்கூ டத்தசையாம் பற்பலதொட் டிற்கிட்த்தித்
தள்ளிச் சிறுர்கூடித் தாலாட்டி—உள்ளிலகு

25. மஞ்சட் குளிப்பாட்டி மைமிட்டு முப்பாலும்
மிஞ்சப் புகட்ட மிகவளர்ந்தாய்—மஞ்சரையே

26. பன்னிபொரு பத்துப் பருவமிட்டு நீவளர்த்தாய்
உன்னை வளர்த்துவிட வொண்ணுமோ—முன்னே

27. நினையும் படிப்பெல்லா நின்னைப் படிப்பார்
உனையும் படிப்பிப்பா ருண்டோ—புனைதருநற்

28 செய்யுட்சொன் ஞன்ருமுயர் செந்தமிழ்ச்சொல் லோர்நான்
மெய்யுட் பொருளேழ் விதத்திணையும்—மையிலெழுத் [கும்

29. தாதியாப் பெட்டு மலங்கார மேழைந்தும்
பேதியாப் பேரெழின்மாப் பிள்ளையாய்ச்—சாதியிலே

30. ஆங்கமைசெப் பற்பண் ணகவற்பண் டுள்ளற்பண்
தூங்கற்பண் பட்டத்துத் தோகையரா—ஓங்குமனத்

31. தெண்கருவி யைத்தின் றிடுநூற்று மூன்றுன
பண்களுப்பின் கல்யாணப் பாவையரா—யெண்கொளும்

32. நற்று ரகமா நவரசமாம் பிள்ளைகளைப்
பெற்ருய் பெருவாழ்வு பெற்ருயே—உற்றகலாப்

33. பண்கள்முதற் பெண்களொடும் பாலரொடு நாடகமாம்
பெண்கொளுவில் வீற்றிருக்கப் பெற்ருயே—மண்புகழத்

34. தாழ்விலா வட்டா தசவன் னனைகளெனும்
வாழ்வெலாங் கண்டு மகிழ்ந்தாயே—ஆழ

35. நெடுங்கோல வையையிலென் னேசர்மேற் பட்ட
கொடுங்கோல்செங் கோலாகக் கொண்டாய்—அடங்காத

36. எங்கோவே பத்தென் றியம்புதிசைக் குள்ளேநின்
செங்கோல் செலாத திசையுண்டோ—இங்கேயுன்

37. தேசமைம்பத் தாறிற் றிசைச்சொற் பதினேழும்
மாசறநீ வைத்ததுறு மன்னியரோ—விசு

38. குடகடலுங் கீழ்கடலுங் கோக்குமரி யாறும்
வடவரையு மெல்லை வகுத்தாய்—இடையிருந்த

39. முன்னுறுந்தென் பாண்டி முதற்புனனு டீருன
பன்னிரண்டு நாடுமப் பானுடோ—அந்நாட்டுள்

40. வையை கருவைமரு தாறுமரு வூர் நடுவே
ஐயநீ வாழுமரண்மனையோ—செய்யபுகழ்

41. மூவேந்தர் வாகனமா மூவுலகும் போய்வளைந்த
பாவேந்தே நீபெரிய பார்வேந்தோ—காவேந்து

42. விண்ணவருங் காணரிய வேதா கமங்களெல்லாம்
புண்ணியனே யுன்றன் புரோகிதரோ—எண்ணரிய

43. நல்லபெருங் காப்பியங்க ளுடகா லங்காரஞ்
சொல்லரசே யுன்னுடைய தோழரோ—தொல்லுலகிற்

44. சார்புரக்குங் கோவேநற் சாத்திரங்க ளெல்லாமுன்
பார்புரக்குஞ் சேனு பதிகளோ—வீரரதிர்

45. போர்ப்பா ரதமும் புராணம் பதினெட்டுஞ்
சீர்ப்பாவே யுன்னுடைய சேனைகளோ—பார்ப்பார்கள்

46. அக்கர வர்த்தியென லாமென்பார் பூலோக
சக்கர வர்த்தியுநீ தானன்ரே—சக்கரமுன்

47. பேந்தி நெடுந்தேர்மே லேறிச் சுழிகுளம்
நீந்தியோர் கூட நிறைசதுக்கம்—போந்து

48. மதுரங் கமழ்மாலை மாற்றணிந்து சூழும்
சதுரங்க சேனை தயங்கச்—சதுராய்

49. முரசங் கறங்க முடிவேந்தர் சூழ
வரசங்க மீதிருந்து வாழ்ந்தே—அருள்வடிவாய்

50. ஓங்குபுகழ் மூவ ரொருபா வொருபஃதும்
ஆங்கவைசொல் வாதவூ ராளிசொல்லும்—ஓங்குமவன்

51. கூற்ரு யரனெழுதுங் கோவையுங் கோதிரய்
மாற்ரு விரட்டைமணி மாலையும் தேற்றமுறப்

52. பற்ரு மிலக்கணநூற் பாவுநூற் பாவறிந்து
கற்ருர் வழங்குபஞ்ச காப்பியமுங்—கொற்றவருக்

53. கெண்ணிய வன்னனைக ளீரோன் பதுமறியக்
கண்ணிய மிக்கபெருங் காப்பியமும்—நண்ணியே

54. இன்புறு சேரனரங் கேற்றமகிழ்ந் தம்பலத்தான்
அன்புறுபொன் வண்ணத்தந் தாதியும்—முன்பவர்சொல்
55. மாத்தமிழா மும்மணி மாலையும் பட்டினத்தார்
கோத்தணிந்த மும்மணிக் கோவையும்—மூத்தோர்கள்
56. பாடி யருள்பத்துப் பாட்டுமெட் டுத்தொகையும்
கேடில் பதினெட்டுக் கீழ்க்கணக்கும்—ஆடகமா
57. வெற்பனையார் மாதை விமலரிடத் தேயிருவர்
கற்பனையாற் சொன்ன கலம்பகமும்—முப்படையோ
58. டாடற் கலிங்கமழித் தாயிர மானைகொன்ற
பாடற் கரிய பரணியுங்—கூடல்
59. நராதிபன் கூத்தனெதிர் நண்ணியோர் கண்ணிக்
கொராயிரம்பொ னீந்த வுலாவும்—பராவுமவன்
60. பிள்ளைத் தமிழுமுன்னுல் பேராத பல்குரவர்
வெள்ளத் தினுமிகுத்தோர் மெய்காப்ப—உள்ளத்து
61. விரியஞ் செய்து வினையொழிய வேராச
காரியஞ் செய்யுங் கவிதையே—பாரில்
62. அரியா சனமுனக்கே யானு லுனக்குச்
சரியாரு முண்டோ தமிழே—விரிவார்
63. திகழ்பா வொருநான்குஞ் செய்யுள்வரம் பாகப்
புகழ்பா வினங்கண்மடைப் போக்கா—நிகழவே
64. நல்லேவி னுற்செய்யு ளுற்கரணத் தேர்ப்பூட்டிச்
சொல்லே ருழவர் தொகுத்தீண்டி—நல்லநெறி
65. நாலே விதையா நனிவிதைத்து நாற்பொருளும்
மேலே பலன்பெறச்செய் விக்குநாள்—மேலோரிற்
66. பார்த்தனதாக் கொண்டபிள்ளைப் பாண்டியன் வில்லியொட்டக்
கூத்தனிவர் கல்லாது கோட்டிகொளுஞ்—சித்தையரைக்
67. குட்டிச் செவியறுத்துக் கூட்டித் தலைகளெல்லாம்
வெட்டிக் களைபறிக்க மேலாய்த்தூர்—கட்டி
68. வளர்ந்தவைபான் முந்திரிகை வாழைக் கனியாய்க்
கிளர்ந்தகரும் பாய்நாவி கேரத்—திலங்கனியாய்த்

69. தித்திக்குந் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான
முத்திக் கனியேயென் முத்தமிழே—புத்திக்குள்

70. உண்ணப் படுந்தேனே யுன்னோ டுவந்துரைக்கும்
விண்ணப்ப முண்டு விளம்பக்கேள் மண்ணிற்

71. குறமென்று பள்ளென்று கொள்வார் கொடுப்பாய்க்
குறவென்று மூன்றினத்து முண்டோ—திறமெல்லாம்

72. வந்தென்றுஞ் சிந்தா மணியா யிருந்தவுனைச்
சிந்தென்று சொல்லியநாச் சிந்துமே—அந்தரமேல்

73. முற்றுணர்ந்த தேவர்களு முக்குணமே பெற்றார் நீ
குற்றமிலாப் பத்துக் குணம்பெற்றாய்—மற்றொருவர்

74. ஆக்கிய வண்ணங்க ளைந்தின்மே லுண்டோநீ
நோக்கிய வண்ணங்க ளூறுடையாய்—நாக்குலவும்

75. ஊனரச மாறல்லா லுண்டோ செவிகளுணா
வான நவரசமுண் டாயினாய்—ஏனோர்க்

76. கழியா வனப்பொன் றலததிக முண்டோ
ஒழியா வனப்பெட் டுடையாய்—மொழிவேந்தர்

77. வரங்கு பொருள்கோள் வகைமூன்றே பெற்றார்நீ
ஒங்குபொருள் கோள்வகையெட் டுள்ளாயே—பரங்குபெற

78. ஓர்முப்பா லன்றியைம்பா லுள்ளா யுனைப்போலச்
சீர்முப்ப தும்படைத்த செல்வரார்—சேரமான்

79. தன்னடிக் கண்டு தளைவிடுத்தா யேழ்தளையுன்
பொன்னடிக்குண் டென்பதென்ன புத்தியோ—என்னரசே

80. திண்பா வலர்க்கறிவாஞ் செந்தமிழாய் நின்றவுன்னை
வெண்பாவென் றோதுவது மெய்தானோ—பண்பேர்

81. ஒலிப்பாவே சங்கத் துகமுன் றிருந்தாய்
கலிப்பாவென் றோதல் கணக்கோ—உலப்பில்

82. இருப்பா மருண்மாற்றி யிடேற்று முன்னை
மருட்பாவென் றோதல் வழக்கோ—தெருட்பாப்

83. பொருத்தமொரு பத்துப் பொருந்துமுனைத் தானே
விருத்தமென்று சொல்லல் விதியோ—இருட்குவையை

84. முந்தியொளி யால்விலக்கு மூச்சுடரென் பாருனைப்போல்
வந்தென் மனத்திருளை மாற்றுமோ—சிந்தா

85. மணிகொடையின் மிக்கதென்பார் வண்கொடையு முன்பேர்
அணியும் பெருமையினு லன்றே—தணியும்

86. துலங்காரங் கண்டசரந் தோள்வளைமற் றெல்லாம்
அலங்கார மேயுனைப்போ லாமோ—புலங்காணும்

87. உன்னைப் பொருளென் றுரைக்குந் தொறும்வளர்வாய்
பொன்னைப் பொருளென்னப் போதுமோ—கன்னமிட்டு

88. மன்னர் கவர்ந்தும் வளர்பொருளே கைப்பொருள்கள்
என்ன பொருளுனைப்போ லெய்தாவே—நன்னெறியின்

89. மண்ணிற் புகழுருவாய் வாழ்வதற்கும் வாழுநர்
விண்ணிற்போய்த் தேவுருவாய் மேவுதற்கும்—எண்ணி

90. கொண்டுபுகழ் கொண்டவர்க்கே கூடுமுனைக் கூடாதபுனைக்
தொண்டருக்குத் தென்பாலே தோன்றுமால்—தண்டமிழே,

91. ஈங்குனது சங்கத்தா லீச ருயர்ந்தாரோ
ஓங்குமவ ரானீ யுயர்ந்தாயோ—பூங்கமல

92. வீடாளும் வாணியங்கை மேலே யிருந்தாயோ
ஏடாக வுன்மே லிருந்தாளோ—ஆடரவத்

93. தாழ்பாய லாளரைநீ தானே தொடர்ந்தாயோ
சூழ்பாயோ டுன்னைத் தொடர்ந்தாரோ—வாழ்வேயென்

94. ருேதிமுனி கேட்க வுனைமுருகர் சொன்னரோ
சோதி யவரைநீ சொற்றனையோ—பேதியா

95. நேசருனக் கேபொருளாய் நின்ருரோ நீண்மதுரை
வாசருக்கு நீபொருளாய் வந்தாயோ—பாசமுறும்

96. என்செய்தி நீகண் டிரங்குவது நீதியல்லால்
உன்செய்தி நானே வுரைசெய்வேன்—இன்சொல்லாய்

97. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தகவென்ற—சொற்குள்ளே

98. எல்லார்க்கும் புத்தி யியம்பிக் கரையேற்ற
வல்லா யுனக்குரைக்க வல்லேனே—சொல்லியவுன்

99. ஈரடிக்குள் ளேயுலக மெல்லா மடங்குமெனின்
நேரடிக்கு வேறே நிலனுண்டோ—ஓரடிக்கோர்

100. ஆயிரம் பொன்னிறைக்கு மையரை வீதியிலே
போயிரந்து தூதுசொல்லப் போக்கினோ—யாயிருந்தும்

101. மாண்பாயோர் தூதுசொல்லி வாவென்பே னென்வருத்தம்
காண்பாயென் பெண்மதிநீ காணுதே—ஆண்பனைதற்

102. பெண்பனையா யாக்கினையாற் பெண்களிலே காரைக்கால்
வண்பதியா ரௌவையென வந்துதித்தாய்—நண்பார்

103. திலதவதி யாருடனே சென்மித்தாய் மாடக்
குலதவதி யானத்தர் கூடல்—பலதவஞ்சேர்

104. மேனியார் கண்டிகையும் வெண்ணீறுங் கண்டுருகும்
மானியார் தேசிகனு வந்துதித்தாய்—ஞானியார்

105. துங்க மகவாகத் தோன்றி வனப்பகைக்குஞ்
சிங்கடிக்குந் தாதையாய்ச் சீர்செய்தாய்—இங்குநீ

106. பெண்களெல்லாம் வாழப் பிறந்தமையா லென்மனத்திற்
புண்களெல்லா மாறப் புரிகண்டாய்—ஒண்கமலத்

107. தன்னந் தனைவிடுப்பே னன்னந்தா னங்கவரை
இன்னந்தான் கண்டறியா தென்பரே—மன்னெந்தாய்

108. அப்பாலோர் வண்டை யனுப்பி னவர்காமம்
செப்பாதே யென்றூற் றிகைக்குமே—தப்பாது

109. மானைப்போய்த் தூதுசொல்லி வாவென்பேன் வல்லியப்பூந்
தானைப் பரமர்பாற் சாராதே—ஏனைப்பூங்

110. கோகிலத்தை நான்விடுப்பேன் கோகிலமுங் காக்கையினம்
ஆகி வலியானுக் கஞ்சுமே—ஆகையினுல்

111 இந்தமனத் தைத்தூதா யேகென்பே னிம்மனமும்
அந்தமனே தீதர்பா லண்டாதே—எந்தவிதம்

112. என்றென் றிரங்கினே னென்கவலை யெல்லாம்பொற்
குன்றனையா யுன்னுடனே கூறுகேன்—சென்றுளும்

113. பண்ணிய பத்தோன் பதினு யிரத்திருநூற் (நண்ணி
றெண்ணியதோன் றூற்றென் றெனுந்தொடையாய் -

114. ஒருதொடை வாங்கி யுதவாயோ வோர்சே
விருதுடை யார்க்குநீ வேறே—தருமிக்கே

115. ஓர்வாழ்க்கை வேண்டி யுயர்கிழிகொள் வான்கொங்கு
தேர்வாழ்க்கை யென்றெடுத்த செய்தியும்—கீரன்

116. இசையா வகையி னியம்பினு னென்றே
வசையாடித் தர்க்கித்த வாக்கும்—இசையான

117. பாட்டுக் கிரங்கியொரு பாணனுக்குச் சேரலன்மேற்
சீட்டுக் கவிவிடுத்த சீராட்டும்—பாட்டியலில்

118. நாத்திரமா மேவுபொரு ணன்கு வறுபதெனும்
சூத்திரமப் பாடியரு டோற்றமும்—மாத்திரமோ

119. உன்னோ டவர்விளையாட் டொன்றோ வடமதுரைக்
கந்நேர முன்பிறகே யார்வந்தார்—மன்னவன்மேற்

120. காரியார் நாரியார் கண்டகவி யைப்பகிர
வாரியிலாக் கானகத்தில் வந்தவரார்—நாரிநெடும்

121. போற்றியுறும் பத்திரற்காப் போந்து கிழவுருவில்
தோற்றி விறகு சுமந்தவரார்—தேற்றியவற்

122. கியரிய பொற்பலகை யிட்டவரார் மற்றவன்றன்
நேயமனை விக்கெதிரா நேர்ந்தவனைப்—போயவையில்

123. தள்ளியிசை தாபிக்கத் தக்கவரார் தென்மதுரைக்
குள்விருந்த சொக்கருனக் குள்ளன்றோ—எள்வி

124. வடமொழியில் வேத வசனமே யீசர்
திடமொழியா மென்பார் சிலரே—அடரும்

125. பரசமய கோளரியாய்ப் பாண்டிநா டெங்கும்
அரசமய நீநிறுத்து மந்நாள்—விரசுநீ

126. ஆதிக்கண் வையையில்வே தாகமத்தைத் தாபித்தாய்
சோதிக்கி னேட்கமே சொல்லாதோ—வேதத்தே

127. வாதவனங் கண்டா தடைத்தகத வந்திறந்தாய்
வேதவனங் கண்டால் விளம்பாதோ—வேதம்

128. அமிழ்தினுமிக் கென்னுமுனிக் கன்பருனைச் சொன்னார்
தமிழ்முனியென் னும்பேர்தா ராதோ—தமிழால்

129. அறம்பொரு ளின்பம்வி டாரணர்சொன் னரத்
திறம்பரமர் வாக்கேசெப் பாதோ—மறந்திடலில்

130. கற்பலகை யோதுமறை காணர்கீழ் நிற்கவுநீ
பொற்பலகை மேலிருந்தாய் போதாயோ—தற்பரரே

131. டெண்ணிறந்த வாசியமைத் திட்டாய் சதுர்வேதப்
பண்ணிறைந்த வாசி பகராதோ—அண்ணலார்

132. தென்பா லுகந்தாடுஞ் செய்தியெல்லா முன்னிடத்தில்
அன்பாலென் றப்பாலு மாரறியார்—உன்பேர்

133. பழியார் திசைச்சொல்லார் பன்னூர் திருவாய்
மொழியார் குழறி யொழிவார்—அழியா

134. உருவால வாயிருக்கு மோதரிய முத்தித்
திருவால வாயிருக்குஞ் செல்வர்—ஒருமால்

135. வடமதுரை யேறுமுன்னே வந்தவடி வென்னத்
தடமதுரை மீனுயர்த்த தானு—படர்தீர்க்குஞ்

136. சத்திபுரத் தோர்பாற் றரைத்துபகிழ்ந் தோர்சீவன்
முத்திபுரத் தோர்பான் மூலைத்தெழுந்தோர்—அத்திசைபோல்

137. ஆங்கோ ரிந்நான் கயிரா வதஞ்சுமக்கும்
பூங்கோயிற் குள்ளுறைந்த புலைரியனுர்—பாங்காம்

138. இடப்பவன மீதாக விந்திரன்வந் தேத்துங்
கடம்பவன மீதிலுறை காந்தர்—அடும்பேர்

139. அலகம் பரிக்கு மரியார் முடிவேய்ந்
துலகம் பரிக்குமுறை யுள்ளார்—பலநாளும்

140. நின்றவூர்ப் பூசலார் நீடிரவெ லாநினைந்து
குன்றுபோ லேசமைத்த கோயிலுப—நன்றிதரும்

141. தாயான கங்கைமுடி தான்குளிரக் கண்ணப்பர்
வாயா லுமிழ்ந்ததிரு மஞ்சனமுந்—தூயமறைத்

142. துன்பார் திருக்குறிப்புத் தொண்டர் துணித்துறையில்
வன்பா யவித்தபரி வட்டமும்—இன்பாத்

143. தனிவரிய மானக்கஞ் சாறனுர் சாத்தும்
மணிமுடிதூழ் பஞ்ச வடியும்—அணிவிடையார்

144. காமன்பான் முன்சேந்த கண்போல மூர்த்தியார்
தாமன்பான் முன்சேர்த்த சந்தனமும்—பூமன்போற்

145. காக்கு மரிபுனைந்த கண்மலருங் காதலொடு
சாக்கியர்தாஞ் சாத்தியபூந் தண்மலரும்—போக்கியமா

146. ஆக்கிய மாற னமுதுஞ் சிறுத்தொண்டர்
மாக்கறியுந் தாயர்தரு மாவடுவும்—நீக்கரிய

147. காரா ரிரவிற் கணம்புல்லர் தம்முடிமேற்
சீராக வேற்றியசெந் தீபமும்—ஆரால்

148. அமைத்து வணங்கலுறு மங்கனர்க்குப் பூசை
சமைத்து வணங்கத் தருமோ—உமைக்கன்பர்

149. அர்சனைபாட் டேயாமென் ருரூரர்க் காதியிலே
சொற்றமிழ் பாடுகெனச் சொன்னமையாற்—சொற்படியே

150. செய்தாய்நால் வேதந் திகைத்தோதுங்கப் பித்தனென்று
வைய்தாய்நீ வைதாலும் வாழ்த்தாமே—மெய்தான்

151. இருந்தமிழே யுன்ற லிருந்தே னிமையோர்
விருந்தமிழ்த் மென்ருலும் வேண்டேன்—வருந்தினன்மால்

152. வெல்லானை தின்ற விளங்கனியா னேன்விரகக்
கல்லானை தின்ற கரும்பானேன்—நல்லவரைத்

153. தேடுநிமற் சிந்தனையிற் றேம்பினேன் வெம்பனியால்
வாடிய செந்தா மரையொத்தேன்—ஓடமிசைக்

154. கொள்ளப்பூ தூர்வெள்ளக் கொள்ளைகடந் தாயென்மால்
வெள்ளங் கடத்திவிட வேண்டாவோ—தள்ளென்று

155. மாறிட்ட சாக்கியரை வன்கழுவே றச்செய்தாய்
சீறிட்ட வேளையது செய்யாயோ—நீறிட்டே

156. அங்கரும்பின் கூனெறித்தா யன்றுவழு திக்குமதன்
செங்கரும்பின் கூனெறியச் செய்யாயோ—அங்கமுறு

157. வெப்புநோய் தீர்த்தாயவ் வேந்தனுக்கென் வெவ்விரக
வெப்புநோய் தீர்க்க விரும்பாயோ—தப்பலவே

158. சாக்கிய ரிட்டநஞ்சு தன்னையமு தாக்கினையின்
ருக்கிய நஞ்சையமு தாக்காயோ—நீக்கரிய

159. வெந்தீக்குள் ளேகிடந்தும் வேவாயென் பார்காமச்
செந்தீச் சுடாதிருக்கச் செய்யாயோ—வந்துகொங்கில்

160. அப்பணியால் வடாதே யார்க்குந் துயரொழித்தாய்
இப்பணியால் வாடா திரங்காயோ—அப்பரை

161. மைக்கடல்கொல் லாதபடி வன்கன் மிதப்பித்தாய்
அக்கடல்கொல் லாமலுற வாக்காயோ—மிக்குயர்ந்த

162. மன்றிற் பனைவடிவ மாற்றினை யப்பனைமேல்
அன்றிற்புள் வேறுருபுள் ளாக்காயோ—தொன்றுதொட்டுத்

163. தென்போதியிற் சாந்திறுெடு தென்றலுற வாய்வந்தாய்
அன்புறவென் னேடுமுற வாக்காயோ—முன்பிருந்து

164. பாடுமிசை யெல்லாமுன் பாவையராய்ச் சேர்த்தாயென்
னேடுமுனி யாதிருக்க வோதாயோ—பாடலாற்

165. சின்னமொடு காளஞ் சிவிகைபந்தர் முத்தடைந்தாய்
பொன்னே சுடாதணியப் பூட்டாயோ—முன்னிறந்தாள்

166. அங்கத்தைப் பூம்பாவை யாக்கினை யாதலினென்
அங்கத்தைப் பூம்பாவை யாக்காயோ—மங்கத்தான்

167. மாய்ந்தாலும் மாமுதலை வாய்ப்பிள்ளை யைப்படைத்தாய்
மாய்ந்தாலும் பின்படைக்க வல்லையே—ஏய்ந்தவுரை

168. செய்தாளென் றென்சொல் செவியோர்ந்து செல்வாயிங்
கெய்தாம லிங்கிருக்க வெண்ணுதே—பொய்தீரத்

169. தேசிவருஞ் சொக்கருக்கே சென்றிருந் தாங்கவரைப்
பேசிவருந் தூது பிறிதுண்டோ—நேசமொடு

170. நைவரினுங் காட்டத் தகாதாரைத் தாதையர்க்குக்
கைவிரலாற் காட்டியருள் காளையும்—தெய்வவெள்ளிப்

171. பூதர வானவரைப் போற்றமுயன் றையாற்றில்
ஆதரவாய்க் கண்ட வரசரும்—நாதர்

172. அளந்தருள்செம் பொன்னைமணி யாற்றிலிட் டாரூர்க்
குளந்தனிலே தேடியருள் கோவும்—வளந்திகழும்

173. காளத்தி யில்வந்த காட்சிகயி லாயத்து
நீளத்தான் சொற்றவனு நீயன்றே—கேளப்பால்

174. அம்மைதமக் கில்லாதா ரம்மைதா மாவிருந்தார்
அம்மையென்று முன்னுரைத்த வம்மையாய்த்—தம்மெதிரே

175. வெள்ளானை மேற்கொண்ட வேந்தர் வரவிடுத்த
வெள்வானை மேற்கொண்ட வித்தகராய்த்—தள்ளாது

176. விஞ்சுவரால் வண்ணனை வெண்ணீற்ற ரென்றுபணிந்
தஞ்சலிசெய் தாட்செய்த வன்பராய்ச்—சஞ்சரியாத்

177. தென்கையி லாயவரைச் செல்வர்பாற் சென்றுயே
உன்கையி லாகாத தொன்றுண்டோ—என்கையால்

178. ஆயு மவள்பாகத் தன்பரு முக்கிரராம்
சேயும் புரந்திருக்குந் தென்மதுரை—வாயினிய

179. செவ்வழியே செல்வாய்நீ செல்வழியி னல்வழிதான்
எவ்வழி யென்ரு லியம்பக்கேள்—எவ்வழியும்

180. வெல்வா யுனைநினைந்து வேயுறு தோளியென்று
செல்வார்தங் காரியஞ்சித் திக்குமே—செல்வாய்

181. தடையுண்டோ வையாறு தன்னிலே பொன்னி
இடைவிலங்கச் சென்றதறி யேனே—இடையிலே

182. பாலைநில நெய்தலாப் பண்ணினு யின்னுமதைச்
சோலைநில மாக்குவைநான் சொல்லுவதென்—மேலானூர்

183. கூறும் பொதிசோறு கொண்டு வரினுனக்கு
வேறும் பொதிசோறு வேண்டுமோ—வீருகக்

184. கற்பார் பொருள்காணுர் காசுபணங் காணிலுனை
விற்பா ரவாபானி மேவாதே—கற்ருரை

185. எள்ளிடுவார் சொற்பொருள்கேட் டின்புருர் நாய்போலச்
சள்ளிடுவார் தம்மருகே சாராதே—தெள்ளுதமிழ்ப்

186. பாயிரமுன் சொன்ன படிபடியா மற்குழறி
ஆயிரமுஞ் சொல்வார்பா லண்டாதே—ஆய்தருநூல்

187. ஓதி யறியாத வொண்பே தையருடனே
நீதி முறையா நிகழ்த்துநூல்—பேதைமையாங்

188. காணுதாற் காட்டுவான் ருன்காணுன் கண்ணெதிரே
நாணு திராதே நவிலாதே—விணுக

189. ஆற்றி னளவறிந்து கல்லா தவையஞ்சுங்
கூற்றினர்பா லேகாதே கூடாதே—போற்றுரை

190. வேண்டாதே கேடில் விழுச்செல்வங் கல்வியென்று
பூண்டாய்நீ தானே பொருளன்றோ—ஆண்ட

191. வலவா நலவா வடுதுறைபி லுன்போல்
உலவாக் கிழிபெற்று ருண்டோ—நலவிருப்ப

192. தாக்கவரு செங்கலைப்பொன் னுக்கினுல் மண்முழுதும்
மாக்கனக மாக்கிவிட வல்லையே—நோக்குபுகார்

193. பாடியதோர் வஞ்சிநெடும் பாட்டாற் பதினாறு
கோடிபொன் கொண்டதுநின் கொற்றமே—தேடியருள்

194. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னுதே
கல்லார்கட் பட்டதிருக் கண்டாயே—கல்லார்பால்

195. ஏகாதே யன்பிலா ரிந்திரன்போல் வாழ்ந்தாலும்
போகாதே யங்கே புசியாதே—மாகவிஞர்

196 தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தாரென்னும்—மாமகிமை

197. சேர்ந்ததுன்பா லன்றோ திருப்பாற் கடலமுதம்
ஆர்ந்தவர்க்கல் லாதுபசி யாறுமோ—சேர்ந்துன்னை

198. நம்பாதார் வீதி நணுகாதே நல்லார்கள்
தம்பா லிருந்து தரித்தேகி—வம்பாகப்

199. பின்போ யமனுேடப் பேர்ந்தோடும் வையையிலே
முன்போ யெதிர்போய் முழுகியே—அன்போடே

200. தாழ்ந்துநீன் சத்தந் தனைக்கற்று ருள்ளம்போல்
ஆழ்ந்த வகழி யகன்றுபோய்ச்—சூழ்ந்துலகில்

201. மேன்மே லுயர்ந்தோங்கு வேதம்போன் மேலாக
வான்மே லுயர்ந்த மதில்கடந்து—போனுல்

202. மிருதிபுரா ணங்களைபோல் வேறுவே ருக
வருதிரு வீதிதழ் வந்தே—இருவினையை

203. மோதுஞ் சிவாகமம்போன் முத்திக்கு வித்தாக
ஓதுந் திருக்கோயி லுட்புகுந்து—நீதென்பால்

204. முன்னே வணங்கி முறையினபி டேகமுனி
தன்னேயம் போலாந் தளவிசையும்—தன்னடைந்து

205. தேறும் படிவர் சிவலோகஞ் சேர்ந்திருக்க
ஏறும் படிநிறுத்து மேணிபோல்—விறுயர்ந்த

206. கோமேவு கோபுரமுங் கூடலின்மேன் முன்னொருநாள்
மாமேகஞ் சேர்ந்ததுபோன் மண்டபமும்—பூமேவும்

207. மட்டலேயும் வண்டெனப்போய் மாளிகைப் பத்தியறைக்
கட்டலேயுங் கண்டு கவிகூர்ந்தே—இட்டமணிச்

208. சிங்கா தனத்திற் சிறந்ததிரு வோலக்கம்
எங்கா கிலுமொருவர்க் கெய்துமோ—பைங்கழல்சூழ்

209. தேங்கமலத் தேசு தெரிசனஞ் செய்தவர்க்கே
பூங்கமலக் கண்கொடுத்த புத்தேளும்—ஓங்கமல

210. மையி லடியில் வணங்காத் தலேயொன்றைக்
கையி லரித்த கடவுளும்—மொய்யிழந்த

211. மானந் தனக்கு வகுத்தகடம் பாடவிக்கு
மானந் தனேவகுத்த வானவனுந்—தேனங்

212. கனிமலர்த்தா ளெஞ்ஞ டமூத்தியமுந் தாதே
மணிமுடிக ளீக்கி வணங்கக் —கணநாதர்

213. ஓதுதுனி யோடுசின முற்றபகை செற்றமுரட்
போத முனிவர் புடைசூழத்—தீதில்

214. அரிய திசைப்பால ரத்தமுத ருங்கித்
தெரிசனக்கண் பார்த்தேவல் செய்யப்—பரவியே

215. முன்னிருவ ரெண்மரொடு மொய்த்த பதினொருவர்
பன்னிருவர் நின்று பணிசெய்ய—முன்னே

216. நதிக ளெனக்கண்டு நந்திபிரம் போங்க
உதகவிரு பாலி னொதுங்கப்—பதினெண்

217. குலத்தவர் தம்மகுட கோடிபதி னெட்டு
நிலத்தோர் முடியா னெரிய—நிலத்தே

218. செருக்குஞ் சினேகமுற்ற தேவி யுடனே
இருக்குஞ் சினகரத்து வெய்திப்—பொருக்கெனப்போய்

219. எந்தாயென் றேத்து மிடைக்காடன் பின்போன
செந்தா மரைபோற் றிருத்தாளும் —வந்துமனந்

220. தேறிக் கழுத்தரியத் தென்பாண்டி நாடனுக்கு
மாறித் திரும்பு மணிக்குறங்குஞ்—சீறிப்

221. பணிக்கற்கு மாருப் படையுடைவாள்சேர்த்து
மணிக்கச் சுடுத்த மருங்கும்—துணிக்கமையாத்

222. தொண்டுபடு வந்தி சொரிந்திடும்பிட் டள்ளியள்ளி
உண்டுபசி தீர்ந்த வுதரமும்—அண்டுமொரு

223. தாய்முலைப்பா லுண்டறியாத் தாம்பன்றிக் குட்டிகளின்
வாய்முலைப்பா லூட்டியபூண் மார்பமுந்—தூயமுடி

224. ஆனிக் கனகத் தழுந்த வழுதிக்கு
மாணிக்கம் விற்ற மலர்க்கையும்—காணிக்காப்

225. பூம்பட்டை யாத்திப் புனைமலரைப் பூணுமல்
வேம்பலரைப் பூண்ட வியன்புயமும்—ஓம்புகொடி

226. வாதிற் கரிக்குருவி வாழ்தற் குபதேசம்
காதிற் புகன்ற கனிவாயும்—தீதில்சொல்

227. வாயிலா நீயிருந்து வாழும் படியுனக்குக்
கோயிலாத் தந்த குழைக்காதும்—போய்வணிகப்

228. பெண்ணிரான் கண்ணீர் பெருகத் தழுவித்தம்
கண்ணீரா லாற்றியருள் கண்களும்—தெண்ணீரார்

229. பண்சுமந்த பாட்டினுக்கும் பாவைதந்த பிட்டினுக்கும்
மண்சுமந்த சோதி மணிமுடியும்—கண்சுமந்து

230. கண்டுகளி கூர்ந்து கசிந்துகசிந் துள்ளுருகித்
தொண்டுசெய்து தான்முடிமேற் சூடியே—மண்டும்

231. உடுக்குலந்தங் கோக்குலமென் றுற்றறிந்தா லென்ன
அடுக்கிலங்கு தீபமெதி ராகக்—கடுத்திடேல்

232. வெங்கதிருண் டுன்குலத்து வெண்மதியுண் டென்னல்போல்
தங்கவா ரத்தீபந் தாமசையத்—துங்கவிடை

233. ஏங்குமொரு மீனுயர்த்தி னெங்கிருப்பே னென்பதுபோல்
ஆங்கிடப நீப மழன்றுட—நீங்கா

234. தருடா ம்ருகத்தரு வானூர்க் குவந்தே
புருடா ம்ருகத்திபம் போற்ற—மருவார்

235. வருகுலத்தார் பானு வரனடுக்குற் றென்ன
அருகுலவுந் தட்ட தசைய—இருசுடர்க்கும்

236. சொக்கருனைத் தானே சுடரென்று காட்டுதல்போல்
அக்கரா லத்தியொளி யாய்விளங்கத்—தக்கவளோ

237. டெற்கும் பயந்தொலித்தா ரென்றுகங்கை தேடுதல்போற்
பொற்கும்ப தீபமெதிர் போய்வளையச்—சொற்குருகும்

238. அற்பூரத் தொண்டர்க் கருண்முத்தி யீதெனல்போற்
கற்பூரத் தட்டிற் கனல்வாய்ப்பப்—பொற்பாக

239. நங்குலத்தும் வந்துதித்தா ரீதரென்று பானுமகிழ்ந்
தங்குறல்போற் கண்ணாடி யங்கனுற—இங்கரசர்

240. எங்குலத்தா ராயினு ரென்றுபிறை தோற்றுதல்போல்
துங்கமுடி மேற்குடைவெண் சோதிவிடப்—பொங்கியெழும்

241. முந்துகடல் வெண்டிரைகண் முன்னேமா மிக்காக
வந்தனபோல் வெண்சா மரையிரட்ட—விந்தைசெயும்

242. ஆட்ரவச் சித்தரிவ ராதலினு லாலவட்டம்
நீட்ரவம் போலவெதிர் நின்றுட—நாடகலா

243. வாலநறுந் தென்றனம் மன்னரென்று காண்பதுபோற்
கோல விசிறி குளிர்ந்தனுகக்—காலைத்

244. திருவனந்தன் முன்னுகச் சேவிக்குங் காலத்
துருவனந்த தேவ ருடனே—மருவியெதிர்

245. போற்றுவாய் நீயும் புரோகிதரை முன்னனுப்பித்
தோற்றரவு செய்து துதித்ததற்பின்—ஆற்றல்

246. அரிய சிவாகமத்தோ ராதிசைவர் தம்பால்
உரிய படையா வொதுங்கி—அருமையுடன்

247. மூவர் கவியே முதலாங் கவியைந்தும்
மூவராய் நின்றுர்தம் முன்னேதி—ஓவாதே

248. சீபாத மெண்ணுத தீயவினைப் பரவிசெய்த
மாபாத கந்தீர்த்த மாமருந்தைத்—தீபமணிப்

249. பைந்நாகஞ் சூழ்மதுரைப் பாண்டியனே பாரமணிக்
கைந்நாகஞ் சூழ்கோயிற் கண்மணியே—மன்னுக

250. மைக்கட் கரும்பை மருவிப் பிரியாத
முக்கட் கனியே முழுமுதலே—மிக்கபுனற்

251. கங்கா நதிக்கிறையே கன்னித் துறைக்கரசே
சிங்கா தனத்துரையே செல்வமே—எங்கோவே

252. நாடவினை யாடிவந்த நற்பாவை போலடியார்
கூடவினை யாடிவந்த கோமானே—தேடரிய

253. சிந்தைமகிழ்ந் தன்புடையார் தேடியநா ளோடியெதிர்
வந்தவினை யாட்டினிமேல் வாராதோ—வந்தருளால்

254. பாவும் புகழ்சேர் பழிக்கஞ்சி யென்றுலகில்
மேவும் பெயரினிமேல் வேண்டாவோ—ஆவலினுல்

255. புக்குவந்தார் தம்மேற் பொடிபோட் டுளமயக்கிற்
சொக்கலிங்க மென்றெவருஞ் சொல்லாரோ—இக்கணைத்த

256. அங்கைவே டானே யரசாள வுஞ்சிறிய
மங்கைதனைக் கோட்டிகொளல் வல்லமையோ—கங்கையெ

257. நல்லமைக்கண் ணுடுவர நல்குதியே நங்கையெலாம் [லாம்
வல்லசித்த ரென்றழைக்க மாட்டாரோ—நல்லவர்போல்

258 மைக்குவளைக் கண்ணி வளைகவர்ந்து மங்கையர்தங்
கைக்குவளை விற்கக் கணக்குண்டோ—திக்குவளை

259. தோட்டாரும் வேம்பாய்த் தொடர்ந்துதொடர்ந் தேயொருதார்
கேட்டாரும் வேம்பாகக் கேட்டோமே—நாட்டமுற

260. வேளையெரித் தாய்க்கியல்போ மின்னூர் கலைகவர்தல்
காளை யிடையிருந்து கற்றதோ—மீளாது

261. சென்றிலகு நாரையன்று சென்றசிவ லோகத்தே
இன்றெனையங் கெய்தவிட லாகாதோ—அன்றியமுற்

262. குன்றே விருத்த குமார ரிளம்பாலர்
என்றேயோர் பெண்விட் டிருக்கலாஞ்—சென்றேருநாள்

263. பொன்னனையாள் வீடும் புகுந்திருக்க லாமெனினென்
பொன்னனையாள் வீடும் பொருத்தாதோ—என்னுமொழி

264. எல்லாந் திருச்செவியி லேறும் படியுரைக்க
வல்லாயுன் போலெவர்க்கு வாய்க்குமே—நல்லாள்

265. கருணைவிழி யாளங் கயற்கண்ணி தன்னே
டருள்புரிய வாழ்ந்திருக்கு மையர்—திருமதுரை

266. தானே சிவராச தானியென்று விற்றிருந்தால்
தேனேநம் பாக்கியத்தின் செய்தியே—ஆனமையால்

267. அந்தரலோ கத்தின்மே லானதிரு வாலவாய்ச்
சுந்தர மீனவனின் சொற்படியே— வந்து

268. துறவாதே சேர்ந்து சுகாநந்த நல்க
மறவாதே தூதுசொல்லி வா

தமிழ் விடுதூது
முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்

# விளக்கவுரை

—:o:—

1 - 8: சீர்கொண்ட..............பகர்ந்தோரும்

(பொழிப்புரை) சிறப்புப் பொருந்திய கூடலென்ற சிவராச தானியைக் காத்து அழகு பொருந்திய சங்கத்திற் புலவராயிருந்தவரும், பல திசைகளிலுஞ் சென்று போர் புரிந்து வாழ்ந்த தமிழரசி யென்று பலரும் வாழ்த்தித் துதிப்பத் திசைதோறும் தன் வெற்றியைத் தோற்றுவித்த பெண்ணரசியும், விருப்பமுறும்படி திருத்தமான சிவஞானத் தொகுதியுடைய ஏட்டுச்சுவடிகளில் ஓர் ஏட்டினைக் கையி லெடுத் தெறிந்த கணபதியும், உண்மையருளால் மதுரையை அரசு புரிந்து ஒருகாலத்தில் மதுரைச் சங்கப் புலவ ரெதிரமர்ந்து பாடலின் சிறப்பை யுணர்த்திய வேற்படையுடைய முருகக்கடவுளும், மனையை விட்டு நீங்காத இளமைவாய்ந்த மூன்றாண்டுப் பருவத்தில் வடமொழி நூல்களும் தென்மொழி நூல்களும் தாமாகிய உமையம்மையா ரூட்டிய ஞானத்தோடு கலந்த முலைப்பாலா னறிந்தவரும், மூன்றாண்டுக்கு முன்னர் முதலையுண்ட பிள்ளையை மூன்றுவிழியார் முன் கவிபாடிப் பின் பெற்றுத் தரும்படி தமிழாலுரைத்தவரும், பிரமனும் திருமாலுந் தோன்றும்படி தேடியும் அறிய முடியாத சிவபெருமான் திருவடியைத் திரு நல்லூரிற் செய்யுள்பாடித் தம் முடியாகப் பெற்றுக்கொண்டவரும், ஆய்ந்து தம் முடியில் மணமுள்ள தாழம்பூவைச்சூடாதவராகிய சிவபெருமான் ஓலையை வாரிச்சேர்த்துத் தம் பட்டோலையில் எழுதிக் கொள்ளுமாறு செய்யுள் பகர்ந்தவரும்.

(விளக்கம்) கூடல்-மதுரை. சிவராசதானி, மதுரை சிவபெருமான் சுந்தரராக வந்து அரசு புரிந்த இடம் ஆதலின். சங்கத் திருந்தோர் என்றது சிவபெருமானே. நாற்பத்தொன்பது சங்கப் புலவர்களுள் ஒருவராக (இறையனார்)

என்ற பெயருடையவராக) இருந்தனரென்பது வரலாறு. போர்கொண்டு என்பது திசைதோறுஞ் சென்று பல மன்னர்களுடன் போர் புரிந்ததை யுணர்த்தியது. மின்: உவமையாகு பெயராய்த் தடாதகைப்பிராட்டியாரை யுணர்த்தியது; தமிழரசி என்று எத்தேடுபபத் திக்கு விசயஞ் செலுத்தியவர் அவரேயா தலின் நசை - விருப்பம். முன்னொரு காலத்திற் சிவபெருமான் உமைபாளுக்குச் சிவகாமப் பொருள் கூறினர் என்பதும், அதனைப் பராமுகமாகக் கேட்டதைபுணர்ந்து வலைஞர் மகளாகப் பிறத்தி நீ என உமையைச் சபித்தனர் என்பதும் தந்தை சபித்ததை யுணர்ந்து தந்திமுகக் கணபதி ஆகமச் சுவடிகளைத் துதிக்கையாலெடுத்துக் கடலில் வீசி யெறிந்தனர் என்பதும் வரலாறு. அதனை "கையிலெடுத்த கணபதியும்" என்றார். அதன விரிவு திருவால. திருவிளை. வலைவீசின படலம் காணக. பாடலறிவித்த படைவேள் என்றது முருகக்கடவுளை. முருகக் கடவுள முன் தடாதகையின் புதல்வன் உக்கிரகுமார பாண்டியனாக வந்து மதுரையை யாண்டு பின்னர் உப்பூர் கிழார் மகன் ஊமை உருத்திரசன்மனாக வந்து இறையனாரகப் பொருளுரைகளுள் நல்லுரை யுணர்த்தினன் என்பது வரலாறு. திருவால ஊமை தமிழறிந்த, உக்கிரன் பிறந்த திருவிளையாடல் காண்க. மூன்றாண்டுப் பருவத்தில் அன்னை முலைப்பாலினறிந்தோர் திருஞான சம்பந்தர். "முத்தமிழ் நான்மறை ஞானசமபந்தன்" என்ற தேவாரப்பாவால் வட கலையும் தெனகலையும் அறிந்தனர் என்பதும், ஞான முணர்ந்தனர் என்பது, "சிவனடியே சிந்திக்கும் திருப் பெருகு சிவஞானம், பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கிய ஞானம், உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ் ஞானம், தவ முதல்வர் சமபந்தர் தாமுணர்ந்த அந்நிலையில்" என்ற சேக்கிழார் திருவாய் மொழியானும் உணர்க.

முதலையுண்ட பிள்ளையைப் பின் ஈன்று தாச்சொல்லி னிசைத்தோர் சுந்தரமூர்த்தியாவர். "கரைக் கான் முதலையைப் பிள்ளை தாச் சொல்லு காலனையே" என்பது அவர் பாடல். அடிமை முடியர்ப் படைத்தோர் என்பது

திருநாவுக்கரசரை. திருநல்லூரில் அப்பர் திருக்கோயிலிற் கண்வளரும்போது சிவபெருமான் வந்து தம் திருவடியை முடியில் வைத்தனர் என்பது வரலாறு. அதற்கு அறிகுறியாக அவ்வூரில் திருவடிநிலை உள்ளது) தாழம்பூ பிரமனுக்குச் சான்றாக வந்து பொய் கூறியதெனபதும் அன்றுமுதல் தாழம்பூவை முடியிற் புனையாது விடுத்தார் சிவபெருமான் என்பதும் பண்டை வரலாறு. மட்டு - தேன். ஓலைப்பூ - தாழம்பூ. பனையோலையை நீளமாக ஒன்றுபோலச் சேர்ப்பதை 'வார்ந்து' என்றார். பட்ட + ஓலை = பட்டோலை. வார்ந்து சேர்த்து பட்டோலை எழுதிக் கொள்ளப் பகர்ந்தோர் எனக் கூட்டுக. பகர்ந்தோர் - மணிவாசகர். (சிவபெருமான் ஒரு மறையவர்போலுருவங் கொண்டு தில்லையில் மணிவாசகப் பெருமான்பால் வந்து நின்று பாவை பாடிய வாயாற் கோவைபாடுக என்றிருந்து கோவைப்பா நானூறும் ஓலையில் வரைந்து கையெழுத்திட்டு வைதது மறைந்தனர் எனபது அன்னார் வரலாற்று நிகழ்ச்சி.) இது தமிழ்விடுதூது ஆதலின் தமிழை முன்னிலைப்படுத்துச் சொக்கநாதர்மீது காதல் கொண்ட தலைவி கூறுவதாகப் பொருளமைந்துள்ளது. "தமிழே" என (கண்ணி 62 வந்துள்ளவிளியை முதலில் வைத்துப் பொருள் கூட்டுக) தமிழே சங்கடபுலவர் இறையனாரும், தடாதகைப் பிராட்டியாரும், கணபதியும், படைவேளும், சம்பந்தரும், சுந்தரும், நாவுக்கரையரும், மணிவாசகரும் "எல்லாரும் நீயாயிருந்தமையால்" (கண்ணி 15) எனக் கூட்டுக.

### 8 - 15 : முட்டாதே..........யிருந்தமையால்

(பொ - ரை.) தடைபடாமல் குறையாத பெருமைத் தமிழ் மூன்றினையும் ஓதிய பெரிய முனிவனும், தொல்காப்பியம் என்ற இலக்கணத்தைக் கூறிய பழைய முனிவனும், குறையாத சொல்லமைந்த பாவின நிலைமையைக் கொண்டு முதலவன்பாற் செல்லும் உயிர்களை (அவற்றின் இயலை) பன்னிரண்டு நூற்பாவைக் கொண்டு முடித்த தூய்மையுடையவரும், இருவிழி களாகிய குற்றமில்லாத கவிதை பாடும் திருமாளிகைத் தேவர் முதலிய முனிவர் யாவரும்;

குலத்தாலும் உற்ற சூழ்ச்சியாலும் நீங்காத உயிர்களைச் சாரும் வினைகளை யெல்லாம் தாம் சாற்றிய மந்திரம் என்ற நூலினால் நீக்கிய வல்லவரும், செந்தமிழிற் பொய்யடிமை யில்லாத புலவரென்று புலவர்களாற் புகழ்ந்து கூறப்பட்ட உண்மைத் தொண்டராகிய சங்கப் புலவர்களும், ஐயடிகள் காடவர்கோன் என்பவரும், செப்பமான (திருத்தமான) சொற்களையுடைய கழறிற்றறிவார் என்பவரும், பாடுவதற்கு அருமையான தெய்வ மொழிப் பாவலரும், ஆராய்தற்கு அருமையான கல்லாத மூடர்கட்குச் சிங்கம் போன்ற கல்வி கேள்வியிற் சிறந்த எல்லாரும் நீயாயிருந்தமையால்.

(வி - ம்.) ஒல்கா - குறையாத. தமிழ் மூன்று - இயல் இசை, நாடகம். இவற்றை முதலில் ஓதியவர் அகத்தியர். தொல்லை + முனி = தொன்முனி. தொல்லை-பழைமை. தொன் முனி, தொல்காப்பியர். அல்கா - குறையாத. மல்கா எனப் பிரித்து நிறையாத எனப் பொருள் கொள்ளலுமாம். திரம் - உறுதிநிலை. பாவின் உறுதி கொண்டு, நிலைகொண்டு என்க. பதி - கடவுள், பசு உயிர். கடவுள்பாற் செல்லும் உயிரைப் பன்னிரண்டு நூற்பாக்களைக் கொண்டு அமைத்தவர். இவர் மெய்கண்ட தேவர். தலைவனைமேற் பாயும் பசுவைப் பன்னிரண்டு கயிற்றாற் கட்டியவர் என மற்றொரு பொருளும் வெளியே தோன்றிற்று. இதனைத் தொனிப்பொருள் எனபர். நேத்திரம் - கண். கண்ணை விளங்கும் கவிதைகள் பாடிய திருமாளிகைத் தேவர் முதலிய முனிவர் என விரித்துக் கொளக. திருவிசைப்பா திருப்பல்லாண்டு பாடிய ஒன்பதின்மரையும் ஈண்டுக் கொள்க. திருமாளிகைத்தேவர். சேந்தனார், கருவூர்த்தேவர். காடவர் கோன் பூந்துருத்தி நம்பி, கண்டராதித்தர். வேணாட்டடிகள், திருவாலி அமுதனார், புருசோத்தம நம்பி, சேதிராயர் என்பவர். சாதி - குலம்; உயர்வு. தந்திரம் - நூல்; சூழ்ச்சி. திருமந்திரம் என்ற நூலாற் சார்வினையை யொழித்த வல்லோர் எனக் கூட்டுக. இவர் மூலர். சங்கத்து மேலோர் : சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மர். கபிலர், பரணர், நக்கீரர் முதலியவர்கள் எனக் கொள்க. ஐயடிகள் காடவர் கோன் :

சேத்திரத் திருவெண்பாப் பாடியவர், கழறிற்றறிவார் - சேரமான் பெருமாணுயனர். அவலார் கூறியவற்றை யெல்லாம் இருந்தவிடத்திலேயே அறியும் அறிவு இறைவனு லருளப்பட்டது. ஆகலின இவர் கழறிற்றறிவார் என்ற பெயர் பெற்ருர். கழறிற்று-சொல்லிய சொல். தெய்வ மொழிப் பாவலர் எனறது வள்ளுவரை தேவர் எனவும் தெய்வப்புலவர் எனவும் இவர் பெயர் வழங்குவதறிக. கல்லா தார்க்குச் சிங்கம் என்று சொல்லும்படி யிருக்கும் எல்லாரும் என்று விரித்துக் கொள்க. எனவே சங்கதிருந்தோர் முதலாகத் தெய்வப் பாவலர் இறுதியாகக் கல்வி கேள்விக் குரியர் எல்லாரும் நீயாயிருந்தமையால் எனத் தமிழ் மொழியை உயர்த்தினர். தமிழே யுருவமாக இருந்தனர் எல்லாரும்; நீ வேறு அவர்கள் வேருக எண்ணற்கு இட னில்லை யென்பது. கருத்து "தமிழே" எனப் பின்னர் (கண்ணி62) வருவதை முன்னர் வைத்துப பொருளுரைக்க.

## 15 - 16: சொல்லாரும்............போற்றினேன்

(பொ - ரை.) புகழ் நிறைந்த எனக்கு வாய்த்த தெய்வமே! உன்னைக் கண்டு துதித்தால் என் குறைகள் எல்லாம் நீங்கும் என்று கருதி நின் பொன் போன்ற திருவடிகளையே புகலாகக்கொண்டு போற்றுகின்றேன்.

(வி - ம்) சொல் ஆரும்-சொற்கள் நிறைந்த என்றும் ஒரு பொருள் கூறலாம். பொன் அடி-அழகிய அடி எனவும் பொருள் தரும். போற்றினேன்-வணங்குகின்றேன்; துதிக் கின்றேன். இது பின்வருமாறு துதிப்பதை யுணர்த்திய தாம்.

## 16 - 19: பன்னியமென்..........வந்தாய்

(பொ - ரை.) நெருங்கிய மெல்லிய பஞ்சியால் நூற்கப் படாத நூலே! பலரால் நெருடப்படாத பாவே! கிழிந்து குறைந்து அழுக்குப்படாத இயல்புள்ள கலையே! மிகுஞ்செய நிறம் தோயாத செந்தமிழே! சொல்லினை ஏராகக் கொண் டுழும் புலவர் மனம் கருகாது சொல்லை விளைக்கும் செய்யுளே! ஒரு குலத்திலும் பிறவாமல் இறவாமல் உயிர்க்

குயிராக நின்றும், வந்த குலங்கள் ஐந்தாகவும் தோன்றி வளர்ந்தாய்.

(வி - ம்.) பஞ்சி - பஞ்சு. பன்னிய-சொல்லிய எனலுமாம். நெருடுதல் - தடவுதல். நூல் அறுந்தபோது நாவில் நக்கிக் கைபால் உருட்டிப் பொருத்திப் பரப்புவது பா. கலை - ஆடை, உடை. கிழிதலும் குறைதலும் அழுக்குப் படிதலும் கலைக்குப் பொருந்திய இயல்பு. நூல்களுக்குப் பலவகை நிறம் தோய்ப்பது இயற்கை. செய்யுள - பாட்டு; விளைநிலம் பிறந்தும் இறந்தும் வருகின்ற மக்கள் குலத்திற் பிறவாதும் இறவாதும் உயிர்க்குள்ளுயிராய்ப் பிறந்துவருகின்றாய். குலம் பிறப்பில் இல்லையெனினும் பின் ஐந்து குலமாகவும் வந்து வளர்ந்தாய். ஐந்து குலம் என்றது, ஐந்து பாக்களை: வெண்பா, அகவல், கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா என்பன அவற்றின் பெயர். தமிழே! நீ நூல் எனவும், பா எனவும், கலை எனவும், செய்யுள் எனவும், பெயர் பெற்றாய்; ஆயினும் அவற்றின் பண் - நினக்கில்லை; நீ தனிப் பண்புடையாய் என்க. சொல்லேருழவர்-புலவர். சொல்லினை ஏராகக் கொண்டுழுது பொருட்பயனை மக்கள் மனத்தில் விளைப்பவர் என்ற காரணம் தோன்றிற்று. "சொல்லே ருழவர் பகை" (திருக்குறள் 872) இந்நூலிற் சொலலேருழவர் எனப் (கண்ணி 64) பின்னும் வருவது" காண்க. சொல் நெல் எனவும் பொருள்படும்; ஆதலின் உழவாகம் தியாது நெல்விளைகின்ற வயலே என மற்றுமொரு பொருள் வழங்குவது காண்க.

19 - 22: இருநிலத்து............பிறந்தாய்

(பொ - ரை.) பெருமை தாங்கிய புவியிற் புண்ணியம் வாய்ந்த உந்தியிடத்தில் காற்றுத் தங்கிப் பின் வாக்கு ஆகிய சூற் கொண்டிருந்து தலையும் கழுத்தும் மூக்கும் மார்பும் ஆய நான்கிடத்தினும் சார்ந்து உதடும் நாக்கும் பல்லும் கேடாத மேல் வாயும் ஆய கருவிகளால் வடிவமாகித் தலையினின்று மீண்டு ஏற்றமாறு முதலெழுத்து முப்பதாகவும் சார்பெழுத்து இருநூற்று நாற்பதாகவும் நன்குபெப பிறந்தாய்.

(வி - ம்.) புண்ணியம் - அறம்: தூய்மை. புண்ணியஞ் சேருந்தி என்றது நிறையுயிரின் உந்தியை. முற்செய்த புண்ணிய முடையவரே எண்வகை யுறுப்புக்குறை நீங்கிப் பிறப்பார் என்ற கருத்தினை யுட்கொண்டது. உறுப்புக் குறைவில்லா உடம்பின் உந்தி எனக் கொள்க. உறுப்புக் குறைவுடைய உடம்பின் உந்தியினின்று வளி மேலெழினும் எழுத்துவடிவமாகத் தோன்றாது என அறிக. பவணந்தி முனிவர் "நிறையுயிர் முயற்சியின்" என்றதும் அக் கருத் தினை விளக்கும். வளி - காற்று. இஃது உதானன் என்ற காற்றினை யுணர்த்தும். பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிரிகான், தேவ தத்தன், தனஞ்செயன் எனப் பத்துவகை எனவும்; அவை இன்ன இன்னவிடங்களில் நிற்கும் எனவும்; உதானன் என்னும் காற்று உந்தியில் நிற்கும் என்றும் காற்றினியல் கூறும் தத்துவ நூல் கூறுவது காண்க. உந்தி - கொப்பூழ். "உந்தியிற் றோன்று முதான வளிபிறந்து, கந்தமலி நெஞ்சு தலை கண்டத்து - வந்தபின், நாசிநாவண்ண மிதழெயிறு, மூக்கெனப், பேசு மெழுத்தின் பிறப்பு" என்பர் நேமிநாத நூலுடையார். 'நிறையுயிர் முயற்சியி னுள்வளி துரப்ப, வெழுமணுத் திரளுரங் கண்ட முச்சி, மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின், வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே" என்ற நன்னூற் கருத்தும் நோக்குக. வாக்கு நான்கு வகைப்படும்; பரை, மத்திமை, வைகரி, பைசந்தி என. நன்னூலிலக்கணத்தின்படி சார்பெழுத்து முந்நூற் றறுபத் தொன்பதாம். தொல்காப்பியத்தின்படி மூன்றும், உயிர்மெய் யெழுத்துக்களைக் கூட்டினும் இருநூற்றுப் பத்தொன்பதாம். இந் நூலாசிரியர் இலக்கண விளக்கம் என்ற நூலிற் கூறியபடி தொகை காட்டினர். அந் நூலுள் உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு; உயிரளபெடை 7, ஒற்றள பெடை 11, குற்றியலுகரம் 1, குற்றியலிகரம் 1, ஆய்தம் 1, ஐகாரக் குறுக்கம் 1, ஔகாரக் குறுக்கம் 1, மகரக் குறுக்கம் 1 எனப் பகுத்துத் தொகுத்து இருநூற்று நாற்பது என எண்ணிய முறையறிக (சூத். 5) எழுத்துக்களின் பிறப்பு மக்கட் பிறப்புப் போல வெளிப்படுமாறு வளிதரித்து, கருப்ப

மாய், வண்ணத்துருவாய்த் தலைதிரும்பிப் பிறந்தாய் என வமைத்திருக்கும் சொன்னயங் காண்க.

22 - 27 : மேற்படவே.......படிப்பிப்பாருண்டோ

(பொ-ரை.) இவ்வாறு நீ பிறந்ததற்கு மேற்பட்டு எண் முதலாகச் சொல்லும் பன்னிரண்டு பகுதிகளாகச் செய்து மண்ணுலகிற் பிறந்த முதன்மையுடையோர் வளர்க்குங் காலத்தில் ஆசிரியர்கட்குக் கண்மணிபோல் விளங்கிப் பள்ளிக்கூடத்தில் அசையாம் பலபல தொட்டில்களிற் படுப்பித்துச் சிறுவர் கூடித் தள்ளித் தாலாட்டி உள்ளிடம் விளங்கும் படி மஞ்சளாற் றேய்த்துக் கழுவி மையிட்டு மூன்று பாலும் மிகுதியாகப் புகட்ட உயர்ந்து வளர்ந்தாய். மைந்தர் களையே பத்துப் பருவமாக்கி நீ வளர்க்கின்றாய்; அத்தகைய இயல்பு வாய்ந்த நின்னையொருவரால் வளர்த்துவிடக் கூடுமோ? கூடாதனன்றோ? முதலில் நினைக்கும் கல்வி யெல்லாம் நின்னாலே யுள்ளனவென வுணர்ந்து நின்னைப் படிக்கும் இயல்புடையவரே மனிதர் எல்லாரும். உனக்குக் கற்பிப்பவர் ஒருவருண்டோ? இல்லை

(வி - ம்) எண் முதலாக ஈராறு பருவம் என்றது : "எண் பெயர் முறைபிறப் புருவ மாத்திரை முதலீ றிடைநிலை போலியென்றா பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே" என நன்னூலார் எழுத்திலக்கணம் பன்னிரு பகுதியுடையது எனப் பிரித்தமையைக் குறித்தது. மண் முதலோர் என்பதை மண்ணிலுள்ள முதன்மையுடையார் என விரித்துப் புலவர்க்குப் பொருத்துக. அசை என்பது ஏட்டுச் சுவடி களைத் தூக்கும் பலகையாம். அசையாம் தொட்டில் என உருவகமாகக் கொள்க. தால் ஆட்டி - நாவினால் அசைத்து (ஒலித்து) அ, ஆ, இ, ஈ என ஒலிப்பதைக் காட்டிற்று. அது பண்டைக் காலத்து ஏட்டுச் சுவடிகளில் எழுத் தெழுதி அவை நன்கு விளங்குவதற்கு மஞ்சளையரைத்துப் பூசுவதும் கரியைக் கரைத்துப் பூசுவதும் வழக்கமாம். இக் கருத்துக் குறிப்பால் விளங்க "மஞ்சட் குளிப்பாட்டி மையிட்டு" என்றார். மையிடுதல் - கரிபூசுதல். முப்பால்

அறம், பொருள், இன்பம் என்ற பொருள்களை. சிறுவர்கட்கு ஊட்ட அதனால் நீ பெருகினை யெனத் தமிழ்க்குச் சொல்க. மைந்தர் - மஞ்சர் எனப் போலியாய் வினறது மைந்தர் என்றது ஆண் பெண் என்ற குழந்தைகளை. பத்துப் பருவம் இட்டு வளாத்தாய் என்றது காப்புப் பருவ முதலாகக் கூறும் பத்துப் பருவங்களையும் இயற்றிய பிள்ளைத் தமிழ் என்ற பேரிட்டு ஆடவர் பெண்டிர் எனற மக்களைப் புகழால் வளரும்படி செய்தாய் என்ற கருத்தினை யுட்கொண்டது. தமிழை வளர்க்கின்றேன் என்று கூறுவது பொய்புரையும் புனைந்துரையுமாம் என்பது விளங்க 'உன்னை வளர்த்து விடவொண்ணுமோ'' என்றார். வினையும் படிப்பு - எண்ணும் கல்வி, கலை. எல்லாம்: எல்லாவற்றையும உணர்வதற்கு எனச் சொல் வருவித்துக் கொளக. மக்களை வளர்ப்பது போல வெளியே பொருள் தோன்றுமாறு பருவஞ்செய்து வளர்க்கு நாள், தொட்டிலிற் கிடத்தி, தாலாட்டி, மஞ்சட் குளிப்பாட்டி, மைமயிட்டு, முப்பாலும் மிகப் புகட்ட நீ வளர்ந்தாய் என்ற சொற்சுவை காண்க. முப்பால் என்பதும் பிள்ளைகட்குப் புகட்டும் தாய்ப்பால், பசுப்பால், ஆட்டுப்பால் எனப் பொருள தருமாறு புணர்த்திருப்பதும் காண்க.

### 27 - 34: புனைதருநற்..........மகிழ்ந்தாயே

(பொ - ரை.) அணிசெய்கின்ற செய்யுட்குரிய சொற்கள் நான்கும், உயர்ந்த செந்தமிழ்ச் சொற்கள நான்கும், மெய்யாகிய உட்பொருளில் எழுவகைத் திணைகளும், குற்றமில்லாத எழுத்து முதலாகிய யாப்பின் உறுப்புகள் எட்டும், அலங்காரம் முப்பத்தைந்தும இவைபந்து வேறுபட்டுப் பேரழக வாய்ந்த மாப்பிள்ளையாகக் குலமாகிய அப்பாவின்கண் அமைந்த செப்பலோசையும், அகவலோசையும், துள்ளலோசையும, தூங்கலோசையும், ஆகிய பண்கள் படைத்துத் தேவியராகவும, உயர்ந்த மனத்தாலாய்ந்த ஐந்து கருவிகளைப் பெறற நூற்று மூன்றாகிய பண்களும் பின்னர் வரைந்த மணப்பாவையராகவும் கொண்டு மதிக்கப்படும் நல்ல ஆதரவால் ஒன்பது சுவையாகிய மக்களைப் பெற்றெடுத்தாய், பெருமையாகிய வாழ்வினைப் பெற்றாய்;

பொருந்தி கின்னிவிட்டு நீங்காத பண்கள் முதலாகிய பெண்டிர்களோடும் பிள்ளைகளோடும் நாடகமாகிய பெண்கள் கோலுவில் வீற்றிருக்கப்பெற்றாய். உலகத்தோர் புகழும்படி தாழ்வில்லாத பதினெட்டு வகைச் சிறப்புகளாகிய வாழ்வெல்லாம் நோக்கி மகிழ்ந்தாய்.

(வி - ம்.) மக்கள் பிறந்து வளர்ந்து அணி முதலியவை புனைந்து மணமகனாகிப் பெண்களை மணந்து காமக்கிழத்தியரையும் மணந்து மக்கட்பேறு பெற்றுப் பின் உலகவாழ்வில் இன்பங் கண்டு மகிழ்ந்திருப்பது போலத் தமிழும் பிறந்து வளர்ந்து பின்னர் வாழ்வு கண்டு மகிழ்ந்ததாக உருவகப் படுத்துகின்றார் ஆசிரியர். முன்னர் வளர்ச்சி கூறிமுடித்தார் மாப்பிள்ளையாய்ப் பெண்களை மணந்து மகப்பேறு பெற்று வாழ்வு பெற்ற முறை ஈண்டுக் கூறுகின்றார். தமிழ் மொழியை மாடபிள்ளையாக உருவகப்படுத்தி அதற்கு அணிகலன்களாக்கினர்; செய்யுட் சொல் நான்கு. செந்தமிழ்ச் சொல் நானகு, பொருளில் உள்ள எழுவகைத் திணைகள், எழுத்து முதலிய யாப்புறுப்புகள் எட்டு, அலங்காரம முப்பத்தைந்து ஆகிய இவற்றை. பேதியா-பேதித்து; வேறுபட்டு. பல்வகை யணிகலம் புனைந்தசனல் வேறுபட்டுப் போழகுடைய மாப்பிள்ளையானது தமிழ் என்பது விளங்கிற்று செய்யுட் சொல் நான்காவன :—“இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென், றனைத்தே செய்யு ளீட்டச்சொல்லே” என்பதனுலறிக. செந்தமிழ்ச் சொல் நான்காவன: பெயர், வினை, இடை, உரி என வகுத்த சொற்கள். மெய்யுட்பொருள் என்றதை தமிழ்மொழியின் உடலுள் அமைந்த பொருள் எனக் கொள்க உண்மையாகிய அதனுள்ளிருக்கும் பொருள் எனக் கொளலுமாம். அகம் புறம் என்ற பொருளியலில் வகுத்த எழுவகைத்திணைகள். அகத்திற் குரியவை கைக்கிளை குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல், பெருந்திணை யென்பன புறத்திற்குரியவை வெட்சி, காஞ்சி, வஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை என்பன. எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, ஓபா, இனம் என்பன யாப்புறுப்புகள். அலங்காரம் முப்பத்தைந்தாவன தன்மை

அணிமுதற் பாவிக மிறுதியாகத் தண்டியலங்கார நூலிற் கூறப்படுவனவாம். செப்பலோசை வெண்பாவிற்குரியது. அகவலோசை அகவற்பாவிற்குரியது. துள்ளலோசை கலிப் பாவிற்குரியது. தூங்கலோசை வஞ்சிப்பாவிற்குரியது. இந் நான்கு பண்களையும் தமிழ மணமகனுக்குப் பட்டத்து மனைவி மாராக உருவகப்படுத்தினர். தோகையர் - மயில்போன்ற சாயலுடையவர் என்ற காரணப் பெயர், இஃது இடுகுறியள வாய்ப் பெண் என்ற பொருள் தந்தது. மனத்தெண் கருவி ஐந்து என்றது. தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவி என்பவற்றை மனத்து எண் கருவி என்பதை மனத்தால் எண்ணப்படும் கருவி யென்றுவது மதிக்கப்படும் கருவியென்றுவது பொருள் கொள்க. ஈன்றிடும் - பெற்ற. இடு: துணைப் பகுதி. ஐங் கருவிகளுங் கூடிப பெற்ற நூற்று மூன்று பண்கள் என்க. இசையரங்கில் ஐவகைக் கருவிகளும் அமைத்துப் பாடுமுறை சிலப்பதிகாரம் அரகேற்று காதையிற் காண்க. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்ற ஏழிசைகளையும் "பன்னிருகாற் றிரிக்கப் பன்னிரு பாலை பிறக்கும்" எனவும், "பன்னிரு பாலையினுரு தொண்ணூற் றொன்றும் பன்னிரண்டுமாய்ப் பண்கள நூற்று மூனரு தற்குக் காரணமாமெனக் கொள்க" எனவும் அடியார்க்கு நல்லார் உரைப்பது அறிக. (அரங்கேற்று காதை எ0-கூச உரை.) கல்யாணப் பாவையர் - வதுவைக்குரிய பெண்கள். ஒரு தலைவனுக்கு மனைவியர் சிலர் என்பதும், பின் முறையே அவன் காமக் கிழத்தியர் காதற்பரத்தையர் பலரை மணந்து வாழ்வான் எனபதும் இலக்கிய மரபு. நம்பியகப்பொருளில் "காதற் பரத்தைய', காமக் கிழத்தியர்' எனவும், "அவருளும் வரைதற்குரியோருளரே" எனக் கூறியிருப்பதும் காண்க எனவே நூற்றுமூன்று பண்களும் மணமகனுக்குப் பின்முறை வதுவைப பெருங்குலக் கிழத்தியர் எனக்கொள்க. "பாடுமிசை யெல்லா முன பாவையராய்ச் சேர்த்தாய்" என் பர் (164) பின்னும். இயல் இசை நாடகம என்ற முத் தமிழில் நடுவின்ற இசை சிறப்புடையது ஆதலின் பண்களை யெல்லாம் பெண்களாகக் கொண்டார்; பெண்கள் உடற்கு

இன்பந்தருவது போலப் பண்கள் செவிக்கின்பந்தருவது குறித்து. எண்கொளும் - மதிப்புப்பெற்ற தாரகம் - ஆதாரம். நவரசம்-ஒன்பது சுவை. இவை பண்கள என்ற பெண்களை ஆதாரமாகக் கொண்டு பிறந்த பிள்ளைகள். வீரம் அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம்,நகை, சாந்தம் என்பன பெயர். பண்களுடன் பாடியபோதுதான் சுவை தோன்றும், பண்களின்றிச் சுவை தோற்றுவித்தல் இயலாது. நன்மகப் பேறு பெற்றவரே பெருவாழ்வு பெற்றவராவர் என்பது தோன்றப் "பெற்றாய் பெருவாழ்வு பெற்றாயே" என்றார். முற்கூறிய பெண்கள் பிள்ளைகளுடன் நாடகமாகிய கொலுவில் வீற்றிருக்கப் பெற்றாய் என்க நாடகத்தைக் கொலுக்கூடமாக உருவகம் கொள்க. பெண்கள் கூடிய கொலு என அடையாக்குக. பெண்கள் மிகுதியாகக் கூடிய கொலு "பெண்கொலு" என்க. கொலு - அரங்கு, நாடகமேடை, அட்டாதசம்-பதினெட்டு; அட்டம் எட்டு. தசம் - பத்து. எட்டுடன் சேர்ந்த பத்து என்க. வன்னனை - வருணனை என்ற வடமொழியின் சிதைவு. சிறப்பு என்பது பொருள். மலை, கடல், நாடு, நகர், பெரும்பொழுது ஆறு, சிறுபொழுது ஆறு. சூரியன் சந்திரன் ஆகியவை. காப்பியங்களில் வருணிக்கப்படுவன பெரும்பாலும் இவை. "மலைகடல் நாடு வளநகர் பருவ, மிருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து" என்றார் தண்டியாசிரியரும். தமிழே நீ இத்தகைய சிறந்த வாழ்வெல்லாங் கண்டு மகிழ்ந்தாயே என்று தமிழின் சிறப்புரைத்தார். இங்ஙனம் உருவகம் செய்த அருமை நனி பெரிதும் போற்றிப் பாராட்டற்பாலது.

### 34 - 41 ஆழநெடுங்..........பார்வேந்தோ

(பொ - ரை.) ஆழமான நீண்ட அழகுடைய வையை யாற்றி லென்னுடைய அன்பர் சிவபெருமான் மேற்பட்ட கொடிய பிரம்படியைச் செங்கோல் போல ஏற்றுக் கொண்டாய்! அடங்காத வலிமையுள்ள எம் மன்னனே, பத்தென்று கூறும் திசைக்குள்ளே நின்னாட்சி செல்லாத இடமொன்றுண்டோ! இங்கே யுன் தேசம் ஐம்பத்தாறில் வழங்

ரும் திசைச் சொற்கள் பதினேழும் குற்றமற நீ அரசு புரிய வைத்த குறுநிலமன்னர்களோ! அலைவீசுகின்ற மேல் கடலும் கீழ்கடலும் முதன்மையான தென்குமரியாறும் வடவேங்கட மலையும் எல்லையாக வகுத்தாய். இவற்றின் நடுவேயிருந்த தென்பாண்டி முதல் புனனாடு முடிவான பன்னிரண்டு நாடு களும் அத்தமிழ் நாட்டின் பகுதிபட்ட நாடுகளோ! அந்நாடு களுள் வையை, கருவை, மருதாறு, மருவூர் இவற்றின் நடுவே அரசே நீ வாழும் அரண்மனை யுளதோ மூவேந்தரை ஊர்தி யாகக் கொண்டு மூன்றுலகமும் போய்ச் சுற்றிவந்த பாவேந்தனே! நீ பெரிய பார்வேந்தனோ! (நானறியேன்)

(வி - ம்.) கோலம் நீர்க்கரையுமாம். செந்தமிழின் பொருட்டு மணிவாசகப் பெருமானின் பாடல் கேட்டிரங்கிச் சிவபெருமான் மண் சுமக்க வந்தமையாற் பிரம்படியைத் தமிழ் ஏற்றுக்கொண்டதாகக் கூறினர். தமிழ்ப் பற்றுடை யார் சிவபெருமான் ஆதலின மணிவாசகருக்காகப் பிரம்படி பட்டார் என்பது கருத்து. மேல் கீழ் என்ற இடங்களை எட்டுத் திசையுடன் கூட்டப் பத்தாம். செங்கோல் என்பது ஆட்சியைக் குறித்தது. மொழியாட்சி தமிழ்மொழி பேசாத திசையொன்று மின்று என்பது கருத்து. ஒரு காலத்தில் இந்நாடு ஐம்பத்தாறு தேசங்களாகப் பகுக்கப்பட்டிருந்தன வென்பதும் அவற்றுள் தமிழ்மொழி வழங்கும் நாட்டினைச் சார்ந்தன பதினேழு எனவும் தோன்றுகிறது. 'சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனம் துளுக் குடகங், கொங்கணம் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம் வங்கம், கங்க மகதங் கவுடங் கடாரங் கடுங்குசலந், தங்கும் புகழ்சேர் தமிழ்சூழ் பெருப்புவி தாமிவையே" என்பதனாலறிக. பதி னேழு நாட்டு மொழிகளும் உனக்குச் சிற்றரசரோ என்றார். நெருங்கிய தொடர்புடைய மொழிகளெனக் கருதி, மன்னியர் - மன்னர், அரசர். கோக்குமரி என்றது தலைமை யான குமரியாற்றினை, "வடவேங்கடந் தென்குமரி யாயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்" எனத் தொல்காப்பியத் திற் பாயிரம் வகுத்தபடியிது. குடக்கு - மேற்கு. குடக்கு கடல் குடகடல் என்று புணர்ந்து நின்றது. வடவரை - வடக்

இன்கண் உள்ளமலே. இது குறிப்பால் வேங்கடத்தையுணர்த் திற்று. மூன்னுறும் - விளக்கின்ற. கருதுகின்ற. "தென் பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி, பன்றி மருவழ் வதன் வடக்கு—நன்றாய, சீதமலாடு புனனாடு செந்தமிழசே ரேதமில் பன்னிருநாட்டெண்" எனக் கூறியவற்றைத் தென் பாண்டி முதற் புனனாடீறான பன்னிரண்டு எனப் பகர்ந்தார். அப்பால்+நாடோ; அப் பகுதியினுட்பட்ட நாடோ. ஐய-அரசனே; இது விளி. வையை யாற்றின் வடக்கும் கருவூரின் கிழக்கும் மருத யாற்றின் தெற்கும் மருவூரின் மேற்கும் ஆகிய எல்லையையுடைய நடுவிடத்தை "நடுவே" என்றார். இது செந்தமிழ் நாட்டெல்லை யென்பது. கருவை-கருவூர். இவ் வெல்லை "அவற்றுள் இயற்சொற்றாமே" என்ற தொல் காப்பியச் சூத்திரத்திற்கு இளம்பூரணர் முதலிய உரையாசி ரியர் கூறியபடியாம். மூவேந்தர்: சேரன், சோழன், பாண்டி யன் என்ற தமிழ் நாட்டரசர். வாகனம்-ஊர்தி. அம் மன்னர் வாயிலாகத் தமிழ்மொழி எங்கணும் சுற்றிவந்தது என்பது கருத்து. இமயமுதற் குமரிவரை ஒருமொழி வைத்துல காண்ட சேரலாதன் எனவும், திருக்கைலாயஞ் சென்று ஞான வுலா அரங்கேற்றினர் சேரமான பெருமாணயனார் எனவும் வரலாறு தோன்றுதலால் "மூவுலகும் போய்வளர்ந்த பாவேந்தே" என்றார். பெரிய பார்வேந்தோ என்பதிலுள்ள ஓகாரம் வியப்புப் பொருளைக் காட்டிற்று. மன்னியரோ பாணடோ, அரண்மனையோ என்பவற்றிலுள்ள ஓவும் அன்ன. நீ போரசனாக இருப்பதனால் உனக்குக்கீழ்ச் சிற்றரசரும் பன்னிரண்டு நாடுகளும் உள, அரண்மனையும் நடுவே யுளது, நின் செங்கோல் செல்லாத திசையும் இல்லை எனப் பொருள் கொள்க. மூவேந்தர் மண், விண் பாதலம் என்ற மூன்றுல கங்களினும் சென்றபோது தமிழும் அவர்களுடன் சென்றது என்க. சோழன் கிள்ளி பாதாலத்திற் சென்று நாககன்னியை மணந்ததும், மூசுகுந்தன் விண்ணுலகு சென்று அசுரர்களை வென்று தேவர்களைக் காத்ததும், கிலந்தருதிருவிற்பாண்டி யன் மேலுலகு சென்று தேவர் அசுரர்பகையைத் தீர்த்ததும் சேரர்களிற் சிலர் வானளவுஞ் சென்றுவென்று வானவரம்பன் என்ற பெயர் பெற்றதும் இவைபோன்ற வரலாறுகள் தமிழ்

நாட்டரசர் மூவுலகுஞ் சென்றனர் என்பதைப் புலப்படுத்து கின்றன. பத்துத் திசையும் தமிழரசன் செங்கோல் சென்றது வரலாறுகளால் உணர்க.

### 41 - 49 ; காவேந்து............வாழ்ந்தே

(பேர - ரை.) கற்பகத்தருவை யேந்திய விண்ணுலகத் தேவர்களுங் காண்பதற்கு அருமையான நான்கு வேதங்கள் ஆகமங்கள் எல்லாம் உனக்குப் புரோகிதர் போலும். புண்ணியனே! அளவற்ற நல்ல பெருங்காப்பியங்களும் நாடகங்களும் அலங்காரங்களும் ஆகிய நூல்களெல்லாம் உன்னுடைய நண்பர்கள் போலும்; மொழிச்சட்டசரசனே! பழைமையான இவ்வுலகத்திற் சார்ந்தவர்களைக் காக்கும் வேந்தனே! சாத்திரங்களெல்லாம் உன் பூமியைப் புரக்கும் படைத் தலைவர்கள் போலும். வீரர்கள் நடுங்கத்தக்க போர் வரலாறு கொண்ட பாரதம் என்ற நூலும் பதினெண்புராணங்களும் உன்னுடைய படைகளேயாம். சிறப்புடைய பாடலே! உன்னைப் பார்ப்பவர்கள் எல்லாம் அக்கரவர்த்தி யென்று சொல்லலா பென்டார்; இப்பூவுலகிற் சக்கரவர்த்தியும் நீதானன்றோ? சக்கர மூன்னர் ஏந்தி நெடுந்தேர் மேலேறிச் சுழிகுளம் இறங்கி நீந்தி, ஒரு கூடம் நிறைந்த சதுக்கத்தில் வந்தமர்ந்து இனிமை பரவும் பாலைமாற்றினை யணிந்து, சூழுஞ் சதுரங்க சேனைகளும் விளங்க நன்மையாகி முரசு முழங்க முடிவேந்தர் சூழ உயர்வான சங்கப்பலகை மேலிருந்து வாழ்ந்து.

(வி - ம்) கா - கற்பகம். ஏந்திய விண் என அடையாக்குக. இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்கள். ஆகமங்கள் காமிக முதல் வாதுளம் இறுதியாகவுள்ள இருபத்தெட்டு. இவற்றைத் தமிழ்ப் பேரரசனுக்குப் புரோகிதர் ஆக்கினர். காப்பியம் நாடகம் அலங்காரம் இவற்றை நண்பராக்கினர் சாத்திரங்களைப் படைத் தலைவராக்கினர். பாரதமும் புராணங்களும் படைகள் ஆம் என்றனர், தமிழ்மொழிக்கு இவை துணையாகி யடுத்து நிற்றலால், அக்கரவர்த்தி-எழுத்துக்களின் வழிவருவோன். அக்கரவர்த்தி - அக்கரவர்த்தனம் என்ற சொல்லணிக்கவி

யினிற்பவன். அக்கரம் - எழுத்து. எழுத்து வருத்தனம் என்பது சித்திரகவியி லொன்று. சக்கரவர்த்தி-சக்கரத்தி லமைக்கும பாடலாகிய சித்திரகவியினிற்பவன். நான் காரைச் சக்கரம், ஆருரைச் சக்கரம், எட்டாரைச் சக்கரம் என்ற சித்திரப் பாடல்களில் வைத்த முறைப்படி ஏந்தப் பட்டுச் சக்காத்தின் வழிச் சென்று பின் தேரினமேலேறி எனக் கொள்க. சுழிகுளம் என்பது ஒரு சொல்லணி. அஃதமைந்த பாவினிறபதை நீந்தி எனறூர். கூடசதுக்கம், மாலைமாற்று, சதுரங்கபந்தம், முரசபந்தம இவற்றின் பெயர் தோனறுமாறும ஒரு சக்கரவர்த்தி வருமாறும் ஆக இரு பொருள் தருவதை யறிக. சுழிகுளம் - நீர்சுழிக்கின்ற குளம் எனக்கொண்டு அரசன் அதில் நீந்தி வருவன் என்பது தோன்ற நின்றது. சதுக்கம்-நாற்சந்தி போந்து-வந்து. நாற் சந்தி வழிவந்து என்பதொரு பொருள். சதுரங்கம்-நால் வகைப்படை. அவை யானை, தேர், குதிரை, காலாள், இவை விளங்க என்பது ஒரு பொருள். சதுராய் - நலமாய், சூழ்ச்சியாய். முரசம் கறங்க - பேரிகை முழங்க, மாலை மாற்று - மாற்றுமாலை; பலவேறு வகைப்பட்ட பூ மாலைகள். வரம் - மேன்மை, உயர்வு சங்கம் - சங்கப்பலகை. முடி வேந்தர் சூழச் சங்கப்பலகையின் மேல் இருந்து வாழ்ந்து என்க. சக்கர முன்பேந்தி என்பது முதல் முரசங் கறங்க என்பது வரை தமிழின் இயலுக்கும் அரசன் செயலுக்கும் ஏற்றவகை சொற்றொடர்களைப் பொருத்தியிருப்பது காண்க. "கோமூத்திரியே கூட சதுக்கம் மாலைமாற்றே எழுத்து வருத்தனே, நாகபந்தம் வினவுத் தரமே, காதை கரப்பே கரந்துறை செய்யுள், சக்கரம் சுழிகுளம் சருப்பதோ பத்திரம் அக்கரச் சுதகமு மவற்றின் பால" எனச் சித்திரகவியின் பெயர் கூறியிருத்தல் காண்க. உரையாசிரியர் விளக்கமும் எடுத்துக் காட்டும் ஆய்ந்தால் சித்திரப்பாவின் அருமை பெருமை தெரியும்.

49 - 56: அருள்வடிவாய் ............ கீழ்க்கணக்கும்

(பொ - ரை.) சிவபெருமான் திருவருளின் உருவமாகி யுயர்ந்த புகழ்பெற்ற மூவரும் பாடிய ஒருபா ஒருபஃதும்,

அப் பதிகங்களை யுரைத்த வாதவூராளி பாடலும், உயர்ந்த அம்மணிவாசகர் கூற்றாகச் சிவபெருமான் எழுதிய திருக்கோவையார் என்னும் நூலும், குற்றமில்லாத அம்மையார் பாடிய சொல்லாகிய இரட்டைமணி மாலையும் தெளிவு பொருந்த எல்லார்க்கும் பற்றாகிய இலக்கண நூற் சூத்திரங்களும், அவற்றையறிந்து கற்ற புலவர்கள் பாடி வழங்கிய ஐம்பெருங்காப்பியங்களும், அரசர்க்குரியனவாக எண்ணப்பட்ட நாடு நகர் முதலிய பதினெட்டுவகைச் சிறப்புகளும் தெரியும்படி பாடப்பட்ட பெருமை மிகுந்த பெருங்காப்பியங்களும், தில்லையையடைந்து இன்புற்ற சேரமான் அரங்கேற்ற அம்பலத்தான் மகிழ்ந்து கேட்டு அன்புற்ற பொன்வண்ணத்தந்தாதியும், முனனீர அனனவா பாடிய பெருந்தமிழ் நூலாகிய மும்மணிமாலையும், பட்டினத்தார் பாமாலையாகக் கோத்துச் சிவபெருமானுக்கணிந்த மும்மணிக்கோவையும் சான்றோர்கள் தந்த பத்துப் பாட்டும் எட்டுத்தொகையும் கெடுதல் இல்லாத கீழ்க்கணக்கும்.

(வி-ம்.) மூவர் : ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் என்ற மூவர்; இவர்களே அருள்பெற்றுயர்ந்து புகழ்பெற்றவர் ஆதலின். ஒருபா ஒருபஃது என்றது, ஒருவகையான பாவிற்கு ஒரு பத்துப் பாடல் பாடிய பதிகத்தை யுணர்த்தியது சில பதிகங்களில் ஒன்று இரண்டு கூடியும் குறைந்தும் இருப்பினும் பெரும்பாலும் பத்துப்பா அமைந்திருப்பது நோக்கி ஒருபஃது என்றார். ஒருபாவில் ஒருபஃது என்க. தேவார முழுவதையும் குறித்தது இது. ஆங்கு : அசை. அவை - அப் பதிகங்களை. வாதவூராளி - திருவாதவூரிற் பிறந்து நம்மை ஆட்கொண்டவர் : மாணிக்கவாசகர். சொல்லும் - திருவாசகம் என்ற நூலும். சிவபெருமான் தில்லையில் ஒரு மறையோராய் வந்து பாவை பாடிய வாயாற் கோவை பாடுக என்று வேண்டினன்று மணிவாசகர் கூறக் கோவை நானூறும் எழுதித் "திருச்சிற்றம்பல முடையான்" எனக் கையெழுத்திட்டுவைத்து மறைந்தார் என்ற வரலாறு தோன்ற "அவன் கூற்றா யானெழுதுங் கோவை" என்றார். தாய் என்றது காரைக்காலம்மையாரை. அம்மையே என்று

சிவபெருமான் அழைக்கும் பெருமையுடையவர் என்பதைக் காட்டியது. மாற்று - சொல் பதினோராந் திருமுறையில் உள்ள திருவிரட்டைமணி மாலையைக் கொள்க. இலக்கண நூற்பா என்றது தொல்காப்பிய முதலிய பல இலக்கண நூல்களிலுள்ள சூத்திரங்களை யெல்லாம் குறித்தது சூத்திரங்கள் எனவே அவற்றாலமைந்த எல்லாவிலக்கண நூல்களை யும் எடுத்துக் கூறியதாயிற்று. "நூற்பாவறிந்து' என்றது, மேற்கூறிய இலக்கண நூல்களை யாய்ந்து என்ற பொருளைத் தந்தது. அகரச்சுட்டு வருவித்துக்கொள்க. சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பவற்றைப் 'பஞ்ச காப்பியம்' என்றார். கொற்றவர்-மன்னர். பெருங்காப்பியங்களில் பாட்டுடைத் தலைவனை மன்னனாக வைத்து நாடு நகர் முதலிய பதினெட்டு வகைச் சிறப்புங் கூறுவது வழக்கம் ஆதலின் "கொற்றவருக் கெண்ணிய" என்றார். மற்றவர் எவர் தலைவராயினும் பதினெட்டுவகைச் சிறப்பும் பெருங்காப்பியங்களில் வருமென வறிக. வன்னனை - வருணனை - சிறப்பு; புகழ்ச்சி பதினெட்டும் முன்னர் எடுத்துக் காட்டியவை. கண்ணியம பெருமை. தில்லையை நண்ணியேயென வருவிக்க. அம்பலத்தான் மகிழ்ந்து அன்புறு என மாற்றுக. சேரமான் பெருமாணாயனார் பொன் வண்ணத் தந்தாதி தில்லையில் அரங்கேற்றப்பட்டதென்றறிக. முன்பு என்றது அரங்கேற்றுவதற்கு முன்னர் எனப் பொருள் தந்தது. மாத்தமிழ்-பெரிய நூல். பட்டினத்தார் பாடியது திருவிடை மருதூர் மும்மணிக் கோவை - மும்மணி மாலை எனக் கூறியது திருவாரூர் மும்மணிக் கோவையைக் குறிக்கும். சேரமான் பாடிய நூல். அதுவேயாதலின, மூத்தோர்கள் என்றது கிழப்பருவ முடையோரை யன்று. அறிவில் முதிர்ந்தோரை. இது பத்துப் பாட்டு முதலிய நூல்கள் பாடிய புலவர் அனைவரையும் குறித்ததாம். ஒருபஃதும் சொல்லும் என நூல்களை யெல்லாம் உம்மை கொடுத்தெண்ணிப் பின் "மெய்காப்ப" (60) என முடிக்கின்றார். இன்னுஞ் சில நூல்களை எண்ணுவது காண்க.

## 56 - 61 ஆடகமா..............கவிதையே

(பொ-ரை.) பெரிய பொன் மலை போன்ற திருமேனியுடையவராகிய ஆமாத்தூரில் விற்றிருக்கும் இறைவரிடத்தில் இரட்டையர் என்ற புலவர்கள் கற்பனையாகப் பாடிய கலம்பகம் என்ற நூலும், நூசிப்படை (முன்னணிப் படை) யுடன் சென்று வலிமையாற் கலிங்க நாட்டினையழித்துப் போரில் ஆயிரம் யானைகளைக் கொன்ற வென்றிமைக் குறித்துப் பாடிய புலவராற் பாடற் கருமையான பரணியென்னும் நூலும், கூடல் மன்னன்: கூடற் பெரும் பெருமாள் எனறு பெயர்பெற்ற இராசராச சோழன் ஒட்டக்கூத்தன் எதிரே யமர்ந்து ஒரு கண்ணிக்கு ஓர் ஆயிரம் பொன் பரிசில் தந்து பெற்ற உலா என்னும் நூலும், யாவரும் துதிக்கும் அவ்வொட்டக்கூத்தன் பாடிய பிள்ளைத் தமிழும், முதலாகிய எந்நாளும் பெயராத பல புலவர் பெருமக்கள் வெள்ளமென்ற எண்ணினும் மிகுதியாகியவர் (ஆகிய மெய்க் காப்பாளர்) மெய்காத்து நிற்க மனத்துள் வீரம் செறிந்து தீவினைகள் நீங்குமாறு முதன்மையான செயல் செய்து வருகின்ற கவிதை என்ற அரசனே.]

(வி - ம்.) ஆடகம்-பொன். தங்கம், மாவெற்பு-பெரிய மலை. தங்கமலைபோன்ற செந்நிறமும் ஆற்றலும் உடையார் சிவபெருமான் ஆதலின் வெற்பனையார் என்றார். மாதை - திருவாமாத்தூர். விமலர்-மலமற்றவர். இதுவும் இறைவனையுணர்த்திற்று. இருவர் - இரட்டையர் என்ற புலவர்கள். திருவாமாத்தூர்க் கலம்பகம் இரட்டையரால் பாடப்பட்டது என்ற வரலாறு தெரிக. மூற்படையோடு சென்று ஆடலாற் போர் புரிந்து அழித்துக் கொன்றதனாற் பெற்ற பரணியும் எனச் சொல் வருவித்துப் பொருள் கொள்க பாடற்கு அரிய-பாடுவதற்கு முடியாத; முற்றறிவுடைக் கூத்தர் போன்ற புலவராலன்றிச் சிற்றறிவுடைய ஏனைப் புலவரால் எளிதாகப் பாடவியலாதது பரணி என அந்நூலின் பெருமையை விளக்கிற்று. ஆயிரம் யானை கொன்ற என்பது ஆயிரம் யானையைப் போர்க்களத்திற் கொன்றவனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடுவது பரணி என்னும் நூல்.

என்பதையும் விளக்கியது. "மானை யாயிர மமரிடை மட்ட, மானவ னுக்கு வகுப்பது பரணி" என்ற இலக் கணமும் காண்க. நர+அதிபன்=நாரதிபன். நரர் - மனிதர். அதிபன்-தலைவன். இது வடமொழித் தொடர். வேந்தன் என்பது பொருள். கூடல் - புகார்; காவிரிப்பூம் பட்டினம். காவிரி கடலோடு கலக்குந் துறையில் இது கூடி யிருத்தலாற் கூடல் எனப்பட்டது. உலாவில் ஒட்டக் கூத்தர் இராசராசசோழனைக் "கூடற் பெரும் பெருமாள்" என்று கூறியதும் காண்க. சோழநாட்டிலுள்ள கூடலூரைக் குறித்ததாகக் கொள்ளலும் தகும். விக்கிரம சோழன், குலோத்துங்கன், இராசராசசோழன் என்ற மூவர்மீதும் ஒட்டக் கூத்தர் உலாப் பாடியிருப்பினும் இங்கே குறிக்கப் பட்டது இராசராச னுலாவேயாம். இச் செய்தி சங்கர சோழனுலாவில் "தெள்ளித்தம், முன்னை நகரில்வன் மூதுலாக் கண்ணி தொறும், பொன்னாயிரஞ் சொரிந்த பூபதி யும்" எனக் கூறப்பட்டமை காண்க. பராவும் - துதிக்கப் படும். அவன் என்றது கூத்தனையே எனக் கொள்க; குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ் பாடியவன் அவனே யாத லின் ஒருபா ஒருபஃதும் என்பது முதல், பிள்ளைத்தமிழும் என்பதிறுதியாகக் கூறிய நூல்களையும் மற்றுமுள்ள நூல் களையும் "முன்னும்" எனத் தொகுத்தார். முன்னும்-(இவை முதலாகிய. பேராத - நின்றநிலையை விட்டுப் பெயராத; அழியாத; நிலைத்த. பல்குரவர் வெள்ளத்தினும் மிகுத் தோர் என்று கூட்டுக வெள்ளம் என்பது ஒரு பேரெண். குரவர் - சான்றோர்; வீரர். இங்கு மெய்க்காப் பாளரை யுணர்த்துவதாகக் கொள்க. தமிழாகிய பார் வேந்தே ஈங்குக் கூறிய நூல்கள் முதலாக வெள்ளத்தினும் மிகுந்த நூல்களாகிய மெய்க்காப்பாளர் நின் மெய்யைக் காத்து நிற்க எனப் பொருள் கூட்டுக. பாடல் மனவீரத் தைத் தந்து தீவினைகளை நீக்கி நல்வினைகளைச் செய்விக் கும் என்ற கருத்தடங்க உள்ளத்து வீரியஞ் செய்து...கவி தையே என்றார். ராசகாரியம் என்பது, அரசர்க்குரிய செயல் எனவும் முதன்மையான நல்வினை எனவும் பொருள் பயந்து நின்றது.

## 61 - 68 : பாரில்.........வளர்ந்தனை

(பொ - ரை.) இப் புவியிற் சிங்காதனம் உனக்குக் கிடைத்தால் உனக்கு ஒப்பாவார் ஒருவருண்டோ தமிழே விரிந்து நிறைந்த விளங்கிய ஒருநான்கு பாட்டும் செய்யுள் வரம்பாகவும் புகழப்படும் பாவினங்கள் மடைப் போக்காகவும் நிகழ நல்ல அழகுடன் செய்யுள் நான்கு காணங்களையும் ஏராகப் பூட்டிச் சொல்லே ருழவராகிய புலவர் தொகுத்து நெருங்கி நின்று நான்கு நெறிகளையும் விதைமாக நன்கு விதைத்து நாற்பொருளையும் மேலே விளையும் பயனுகச் செய் விக்கும் நாளில் மேலோரில் கவிபாடுவதைத் தனதாகக் கொண்ட பிள்ளைப் பாண்டியனும் வில்லியும் ஒட்டக்கூத்த னும் ஆகிய இவர்கள் மூவரும் பல நூல்களைக் கல்லாமல் அவையிற் புலவரென அமரவரும் கீழமக்களைக் குட்டியும் செவியறுத்தும் தலைகளையெல்லாம் கூட்டி வெட்டியும் சித்தையராகிய களைகளைப் பறிக்க நீ மேலாகத் தார் கட்டி வளர்ந்தாய்.

(வி - ம்.) அரியாசனம் என்பது அரிந்த பனையே டாகிய ஆசனம் (இருக்கை) என்பதுமாம். பனையேட்டில் எழுதப்பட்டிருந்தால் உனக்கு ஒப்பிலர் ஒருவரும் என்பது ஒருவகைக் கருத்து. அஃது அத்துணைப் பொருத்தமின்று: பூமியில் தலைமை உனக்குத் தந்தால் மற்றை மொழிகளினும் உயர்ந்து நிற்பாய்: இந்நாள் ஆங்கில மொழியின் கீழடங்கி நிற்கின்றாய் என்பது கருத்து.

பா ஒருநான்கு: வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ் சிப்பா என்பன. இனங்கள்: தாழிசை துறை விருத்தம். நாற்காணம் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவை: சொல்லேருழவர் - புலவர். சொல்லை விதைத்துப் பொருட் பயன் கொள்வார் என்ற காரணத்தால் அமைந்தது. நல் ஏர் - நல்ல வனப்பு -"அம்மை யழகு தொன்மை தோல் விருந், தியைபு புலனிழை பெனவனப் பெட்டே" என்றது கொள்க. வைதருப்பம், கௌடம், பாஞ்சாலம், மாகதம் என்பன நெறிகால். இஃது உ. வே. சா. அவர்கள் குறிப்பு.

இந்நெறி வடமொழியிலுள்ளன போலும். தண்டியாசிரியர் வைதருப்பம் கௌடம் என்ற நெறியிரண்டே கூறினர். நாற் பொருள்: அறம் பொருள் இன்பம் வீடு மேலோரில் - அரசர். களில். பா தனதா கொண்ட பிள்ளைப் பாண்டியன் - பாப் பாடுவதைத் தனக்குரிய தொழிலாக்கிக் கொண்ட பிள்ளைப் பாண்டியன். இவன் அதிவீரராம பாண்டியன். கல்லாது கோட்டிகொளும் சித்தைமர் - பலநூல்களையும் கற்றுண ராது புலவர் எனப் பேரிட்டு நல்லவையினும் சென்றமரும் கீழோர்கள். "கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தாற், பெற்றதாம் பேதையோர் சூத்திர—மற்றதனை, நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன், புல்லறிவு காட்டி விடும்' (நாலடி 314) "தானுமோர் புன்கோட்டி கொள்ளு மாங்கீழ்' (நாலடி 260) "அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம் பிய, நூலின்றிக் கோட்டி கொளல்'' (குறள் 401) என வருவன கீழ் மக்களியற்கையைக் காட்டும். இதனை இளங் கோவடிகள், வெள்ளைக் கோட்டி என்பர். கோட்டி - கூட்டம்; கயவாவை காட்டும் ஒரு சொல அது. தூர்கட்டி - அடிப் பக்கம் பருத்து. தமிழ்ப் பயிருக்கு அகன்று, பரந்து விரிந்து எனப் பொருள் கொள்க சொல்லேருழவர் தொகுத்து ஈண்டிச் செய்யுள் ஆகிய வயலில் ஒரு நான்கு பாவாகிய வரம்பை உயர்த்திப், பாவினமாகிய நீர்பாயு மடை வகுத்து, எட்டு வனப்பாகிய அழகுடன் விளங்க நாற்கரணமாகிய ஏரினைப் பூட்டி நால்நெறியாகிய விதையை விதைத்து நாற் பொருளாகிய பயனை விளைவிக்கும் நாளில் (தமிழ்ப் பயிர் வளர்க்கும் நாளில்) சித்தைபர் களைகளாக முளைக்க (வெளிப் பட) பாண்டியன் வில்லி கூத்தன் இவர் குட்டியும் செவி யறுத்தும் வெட்டியும் அக் களைகளைக் களைய நீ மேன்மை யாய்ப் பரந்து வளர்ந்தனை என விளக்கங் கொள்க.

**68 - 70 : பான்முந்திரிகை.........விளம்பக்கேள்**

(பொ - ரை.) பாலும் முந்திரிகைக் கனியும் வாழைப் பழமுமாகி வளர்ந்த கரும்பாகித் தென்னையின் இளங் கனியாகி இனிக்கும் தெளிவான அமுதமாகி அவ்வமுதினும் மேலான முத்தியைத் தரும் ஒரு கனி போன்ற தமிழே!

இயல் இசை நாடகம் என்ற மூவகையான தமிழ்மொழியே! அறிவால் உண்ணப்படும் தேன் போன்றாய்! உன்னோடு மகிழ்ந்து கூறும் வேண்டுகோள் ஒன்று உளது. அதனை நான் சொல்ல நீ கேட்பாய்.

(வி - ம்.) பால், முந்திரிகை, வாழைக்கனி, கரும்பு, நாளிகேரம் இவை செய்யுளின் இயற்கைக்கு எடுத்துக் காட்டும் உவமை. பால் எளிதாகப் பருகிப் பயன் கொள்வது போல எளிதாகப் பொருள் காணும் இயற்கையுடைய கவி ஒருவகை. முந்திரிகைப் பழம் சுவைப்பதுபோலச் சிறிது ஆய்ந்து பொருள் காணும் இயல்புடையது ஒருவகை. வாழைக்கனி தோலுரித்தாற் பயன்படுவதுபோல இருப்பது ஒருவகை; கரும்பு கடித்துச் சுவைத்து இனிமை காணப்படுவது போலப் பிரித்துப்பொருத்தி ஆய்ந்து பொருள்காணப் படுவது ஒருவகை. தேங்காய் மட்டை யுரித்துப் பின்னர் உடைத்தெடுத்துக் கடித்துச் சுவைக்கப் பயன் தருவது போலச் சொற்களைப் பிரித்து அருமையாக வருந்தி யுழைத்துப் பொருள் காண்பது ஒருவகை இவ்வாறு பலவகைப் பட்ட பாவடிவாய் நீ யிருக்கின்றனை என்பது தோன்ற "பால் முந்திரிகை...இளங்கனியாய்" என்றார். இவ்வியல் புடைய செய்யுளை வடமொழி நூலுடையார் க்ஷீரபாகம், திராட்சா பாகம், கதலீபாகம், இட்சுபாகம், நாளிகேர பாகம் என்பர். பாகம்-இயல்பு, தன்மை என்பதை யுணர்த்தும். நாளிகேரம் - தென்னை. இளங்கனி - முற்றாத காய் என்க. காயைப் பழம் என்று கூறும் வழக்கினால் இளங் கனி என்றார். "காய்மாண்ட தெங்கின பழம் வீழ" (சீவக. எனவும், 'தென்னம் பழம்வீழ் சோணாடா" (முத்துப். பிள்ளைத்) எனவும், "தெங்கம் பழங்க மூகின்குலை சாடி" (திருக்கோவையார்) எனவும் வருவன காண்க. 'விண்ணப்ப முண்டு கேள்' என்று பின்னும் தமிழின் சிறப்பே பேசு கின்றார் காண்க.

### 70 - 78 : மண்ணிற்............செல்வரார்

(பொ - ரை.) தமிழே நின்னிடத்திருந்து குறம்எனவும் பள் எனவும் புலவர் கொள்கின்றனர், அவற்றைக் கொடுக்கு

மூனக்கு மூவகையினத்தினும் உறவுண்டோ? பாவின் வலிமையெல்லாம் பொருந்தி யெந்நாளும் கெடாத மணியா யிருக்கும் உன்னைச் சிந்து என்று சொல்லிய நாவானது கெடுமே. வானத்துமேலுள்ள தேவர்களுங்கூட மூன்று குணம் தாம் பெற்றுள்ளார். நீயோ பத்துக் குற்றமில்லா மல் பத்துக் குணம் பெற்றிருக்கிறாய். ஒருவரால் ஆக்கப் பட்ட வண்ணங்கள் ஐந்தின்மேலுண்டோ? இல்லை. நீ நோக்கிய வண்ணங்கள் நூறுடைமாய். நாக்கின்கண் உலவும் குறைவான சுவைகள் ஆறன்றி வேறு உண்டோ? நீயோ செவிகட்கு உணவான ஒன்பது சுவைகளையும் உடை யாய். மற்றைய உலகத்தில் வாழும் மக்கட்கு அழகு என்பது ஒன்றுதான் அன்றி அதிகமுண்டோ? நீயோ வனப்பு எட் டுடையாய். சொல்லப்பட்ட மன்னர்கள் வாங்கும் பொருள் கோள்வகை மூன்றேயாம். நீயோ பொருள்கோள்வகை யெட்டுடையாய். அழகு பொருந்த ஒரு முப்பால் உடை யாய், அன்றியும் ஐம்பாலும் உடையாய்; உன்னைப்போலச் சீர் முப்பதும் பெற்ற செல்வர்கள் யார்? ஒருவருமில்லையே.

(வி - ம்.) குறம் என்பது குறவஞ்சி, பள் என்பது பள்ளுப் பிரபந்தம் என்ற நூல்களை யுணர்த்தின. வெளிப் பொருளாகக் குறவர் பள்ளர் என்று குலத்தையும் உணர்த்து வாயின. மூன்றினம் என்பது தாழ்ந்த அனுலோமர் பிரதி லோமர் சங்கரர் என்ற குலத்தாரையும்; தாழிசை, துறை விருத்தம் என்ற மூன்று பாவினங்களையும் உணர்த்தின் றது கொள்வார், கொடுப்பார்; பெண் கோள்பவர் கொடுப் பவர் எனவும், பாடிக் கொடுப்பார் எடுத்துப் படிப்பார் என வும் பொருள்காட்டி னின்றன. குறவஞ்சி, பள்ளு என்ற நூலின் வரைமறையின்றிப் பாவினம் அமைக்கும் வழக்க முண்டோ என வினவியதாயிற்று. சிந்து என்ற ஒரு பாவிற் குப் பெயர் கூறுகின்றனரோ! அப்பெயர் நின் பெருமைக்குத் தகுமோ! அந்நாக்குச் சிதையுமன்றோ! சிதையவேண்டும் அஃது என்ன பாடல், பெருமையுடையதா? இல்லை. இரா சதம், தாமதம், சாத்துவிகம் என்ற முக்குணங்களே மக்கள் பெற்றனர்; வானவரும் அவற்றையே பெற்றார்; பத்துக்

குணங்கள் பெற்றவர் பார்மேல் எவரும் உளரோ? நீதான் பத்துக் குணங்கள் பெற்று வாழ்கின்றாய்! பத்துக் குற்றங் களும் இல்லாமல் வாழ்கின்றாய் எனச் சிறப்பித்ததாயிற்று. "குன்றக் கூறல்" முதலிய குற்றங்களைக் கூறிச் "சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்" என்ற நன்னூற் சூத் திரப்படி பத்தழகுகளைக் குணமெனக் கூறலாம். அது பொருத்தமின்றெனில் "செறிவே தெளிவே சமனிலை யின்பம், ஒழுகிசை யுதார முய்த்தலில் பொருண்மை காந்தம் வலியே சமாதி யென்றாங், காய்ந்த வீரைங் குணனு மூயிரா, வாய்ந்த வென்ப வைதருப் பம்மே" என்று தண்டியாசிரியர் கூறிய குணங்களைக் கொள்க. ஆசிரியர் கருத்தெதுவோ அறியேம்; குற்றமிலா என்று அடை கொடுத்தது அழகைக் குணமெனக் கொண்டனர் என் பதை விளக்குகின்றது. வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமை என்பன வண்ணங்கள் ஐந்து. எழு வகைவண்ணம் இக்காலம் கூறுவார் உளர்எனினும் அக்கால விமல்பு அஃது என அறிக 'பல்வகை வடிவிரு நாற்றமை வண்ணம்" என்ற நன்னூற் பாவினையுங் காண்க. தமிழுக்கு நூறு வண்ணங்கள் உளளனவென்றது யாப்பருங்கலக்காரி கையில் "எழுத்துப் பதிமூன்று........வண்ணங்களூறென்ப தொண்பொருள் கோள்.......யாப்புள் வகுத்தனவே" என்ற காரிகைக் கருத்தை விரித்ததாம். தூங்கேந் தடுக்கு.... தாங்கா துறழ்தரத்தாம் வண்ண நூறுந் தலைப்படுமே" என்ற உரைக்காரிகையும் விரித்துணர்க. மக்கள் வண்ணங் களை யாக்கினர்; முயற்சியால் ஆயின எனவும், நீ நோக்கிய போதே நூறு வண்ணங்களும் தோன்றின எனவும்தோன்று மாறு ஆக்கிய, நோக்கிய என்ற அடை புணர்த்திருக்கும் அருமை யுணர்க. நா+குலவும் நாக்கு+உலவும்=நாக்குல வம் இருவகையும் ஒருவகைப் பொருளை தரும். ரசம்-சுவை. ஊனம் - குறைவு நாவிற்றோன்றியுடனே மறைவது குறை. பாவிற்சுவை செவிவழிச் சென்று நின்று பயன் தருவது ஆதலின் இதற்குக் குறைகூறினர் என்று கொள்க நவம்+ ரசம்=நவரசம் - ஒன்பது சுவை; வீரம் அச்சம் முதலியவை முன்னர்க் கூறியதுணர்க. ஏனோர் - மற்றையோர்; தமிழை

யன்றியுள்ள மனிதர் தேவர் நரகர் முதலாயினோர். வனப்பு-அழகு; இஃது ஒரு பண்பு. எல்லார்க்கும் உண்டு, எட்டு வனப்பு எவர்க்கும் இல்லை; உனக்கே அவை பொருந்தின எனச் சிறப்புக் கூறியதாயிற்று. “அம்மை யழகு...வனப் பெட்டே” (தொல்-செய் 2:5.) மொழிவேந்தர்: வினைத் தொகை. மொழியப்படும் வேந்தர் எனப்பொருள் கொள்க. பொருள் கொள்ளும் வகை பொருள்கோள்வகை. ‘‘உறு பொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த், தெறு பொருளும் வேந்தன் பொருள்’’ என்ற குறட்பாவின்கருத்தை யொட்டி மூன்று எனக் கூறினர். உறுபொருள் - உடைய ரின்மையால் தானே வந்து சேரும் பொருள்; உல்குபொருள்-சுங்கம்; அயல்நாட்டுப் பொருள் ஏற்றும்வரி இறக்கும்வரி ஆக விதிப்பவை. ஒன்னார்த் தெறுபொருள் - பகைவரை வென்று கொண்ட பொருள் என வகை காண்க. பொருள் கோள்வகை-கவியிற் பொருள் கொள்ளும் வகை. இஃது எட்டுவகை. இத்தொகை நன்னூல் விதித்தபடி ‘‘யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண், டாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட் டடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே’’ என்பது நூற்பா. உரையில் இவற்றின் விளக்கம் காண்க. மூப்பால்: அறம், பொருள், இன்பம். ஐம்பால்: ஆண், பெண், பலர், ஒன்று, பல என வகுத்தவை. சீர்முப்பது: ஓரசைச்சீர் இரண்டு, ஈரசைச் சீர் நான்கு, மூவசைச் சீர் எட்டு, நாலசைச்சீர் பதினாறு என வகுத்தவை யாம். முப்பாலும் ஐம்பாலும் சீர்முப்பதும் படைத்த செல்வரெவரும் இலர், நீயே என்பது கருத்து. பால் என்பது செல்வர்பாலும் உண்டு; முப்பாலே அவர் பாலுள்ளன; ஐம்பால் உள்ளனவாக அறிந்திலம் எனக் குறிப்புக் கொள்க. பசு, எருமை, ஆடு இவற்றின் பால் அவர்பால் உள்ளன. ஒருவர்பால் தம் குறைகூறுவோர் அவரை முதலிற் புகழ்ந்து கூறித் தம் குறையைப் பின்னர்க் கூறுவது முறையாதலின் அம் முறையையொட்டிப் புகழ்வதாக அறிக. எல்லாம் காதல் கொண்ட தலைவியின் கூற்றே.

## 78 - 88 : சேரமான்............எய்தாவே

(பொ - ரை.) சேரமான் கணைக்காலிரும் பொறைக்குப் பொருந்திய காற்றளையை விடுவித்தாய் நீ, அத்தகைய உன் பொன்னடிக்கு ஏழுதளைகள் உண்டெனப் புகல்வது என்ன அறிவின்பாற்படுமோ? என்னரசனே! வலிய பாவலர்க்கு அறிவாகிய செந்தமிழாய் நிற்கும் உன்னை வெண்பா என்று சொல்வது உண்மையாமோ? பண்பும் அழகும் உடைய ஓசையமைந்த பாடலே! சங்கத்தில் மூன்று யுகங்களும் இருந்தாய், உன்னைக் கலிப்பா வென்றுரைப்பது முறையோ? கெடாத இருள் போன்ற பரவிய மயக்கத்தை மாற்றி மக்களை நல்வழிப்படுத்தும் உன்னை மருட்பா என்று கூறுவது நல்ல வழக்காகுமோ? தெளிந்த பாடலின் முன் பத்துப்பொருத்தம் பொருந்திநிற்கும் உன்னைத்தான் விருத்தம் என்று கூறுவது முறையாகுமோ? மூன்று சுடர்களும் முந்திவந்து இருட் கூட்டத்தை ஒளியால் விலக்கும் எனறு சொல்வார் உலகினர்; அச்சுடர்கள் உன்னைப் போல வந்து என் மனத்துள்ள அஞ்ஞானவிருளை மாற்றுமோ? சிந்தாமணி வண்மையிலுயர்ந்தது என்பார்; அம் மணியின் கொடையும் உன் பேரினை (சிந்தாமணி என்ற நூல்) அணிந்த பெருமையால் வந்ததுவே, தாழ்ந்து சரியும் ஒளி விளங்கும் பொன் முத்து முதலியவற்றாற் செய்த மாலைகளும், கழுத்திற் பூண்டவணிகளும், தோளவளைகளும் ஆகிய எல்லா வகைப்பலங்காரமும் அலங்காரம் என்னும் நூலாகிய உன்னைப்போல் ஆகுமோ? அறிவைத்தரும் உன்னைப் பொருளென்றுரைக்கும் பொழுதெல்லாம் பெருகுவாய்; பொன்னைப் பொருளென்றுரைப்பது பொருத்தமோ? கன்னம் இட்டுக் கள்வரால் எடுக்கவும், மன்னராற் றண்டமாகக் கவரவும் வளரும் பொருள்களே மக்கள் கையிலுள்ள பொருள்கள் எல்லாம். என்ன பொருள்கள் அவை உனைப் போல் உறுதுணையாக வந்துதவா அவை.

(வி - ம்.) சேரமான் தன் அடிக்கு அண்டுதளை எனப் பிரித்துக் கொள்க. அண்டு - பொருந்திய; அடுத்த. தளை - கால்விலங்கு கைவிலங்குகள்.

சேரமான் - கணைக்காலிரும்பொறை யென்ற சேர மன்னன். சோழன் செங்கணான், கணைக்காலிரும் பொறையை வென்று விலங்கிட்டுச் சிறைப்படுத்தியபோது அச் சேரமானுடைய நண்பர் ஆய பொய்கையார் என்ற புலவர், சோழன் செங்கணான் மேற் "களவழி நாற்பது" என்ற நூல் பாடி, அதன் பயனாகக் கணைக்காலிரும் பொறையைச் சிறை மீட்டினர் என்ற வரலாற்றினை யுட்கொண்டு, "தளை விடுத்தாய்" என்றார். களவழி நாற்பது என்னும் தமிழ், அம் மன்னன் காற்றளையை நீக்கியது என்பது கருத்து. புத்தியோ என்பதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப பொருளில் வந்தது. பின்வரும் ஓகாரங்களும் அப்பொருளனவே. ஏழ்தளை நின்னுறுப்புகளே! பிறரிட்ட தளை யன்று; அவ்வியல்புடைய தளையாகக் கூறல் அறியாமையாம்; இதன் பொருள் வேறு எனக் கொள்க. "களவழிக் கவிதை பொய்கையுரை செய்ய வுதியன், கால்வழித்தளையை வெட்டிமர சிட்டவனும்" (கலிங்கத்துப் -195) "மேதக்க பொய்கை கவி கொண்டு வில்லவனைப் பாதத்தளைவிட்ட பார்த்திபனும்" (விக்கி : உலா.) 'பொறையனைப் பொய்கைக்குதப் பண்டு, கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோன்" (குலோத்-உலா) 'நல்லவன் பொய்கை களவழி நாற்பதுக்கு; வில்லவன் காற்றளையை விட்ட கோன்' (இராச. உலா) என வருவன இவ் வரலாற்றிற்குச் சான்றாகும். ஏழ் தளையை யாப்பிலக்கணத்திற் காண்க. செந்தமிழ் - திருத்தமான தமிழ். வெண்பா - வெள்ளையறிவுடைய பாட்டு என்பது மற்றொரு பொருள். மெய்யன்று; அது பாட்டின் பெயர்; நீ வெள்ளறிவுடையவனல்லை; திருத்தமான அறிவுள்ளாய் என்று கருத்துப் பொருத்துக. பண்பும் ஏரும் ஒலியும் உடைய பாவே! என்று தமிழை விளித்ததாம். கிரேதா, திரேதா, துவாபர என்ற மூன்று யுகங்களினும் இருந்தாய் என்றது தமிழின் பழைமையைக் குறித்ததாம். கலிப்பா என்றது கலியுகத்திற்குரிய பாடல் என மற்றும் ஒரு பொருள் தந்து அதனை விலக்கியதாயிற்று. இருள் பாமருள் - இருள் போலப் பரவிய மயக்கம். மருளைத்தரும் பாடல் எனக் கூறுவது வழக்கன்று. தெருள் - தெளிவு. தெளிவு தரும் பா என்க. ஒரு பத்துப்

பொருத்தம் என மாற்றி: தெருட்பா என்பதைத் தெளிவுடைய பாவாலமைந்த நூலின் முதற்சீரின்கண் எனச் சொல் வருவித்துக் கொள்க. "மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உண்டி, வருணம், நாள், கதி, கணம் இவையே பத்துப் பொருத்தமாம். இவற்றின் பொருத்த விலக்கணங்களைப் பாட்டியலிற் காண்க. விருத்தம் பாவினத்திலொன்று; வேறுபாடு என்ற பொருளையும் தரும். பொருத்தமுடைய வுன்னை வேறுபாடுடையாய் எனக் கூறுதல் தகாது. வெண்பா, கலிப்பா, மருட்பா, விருத்தம் என்பன பாட்டின் பெயர்களேயாம்; வேறு பொருடந்து நிற்பனவல்ல அவை என்ற கருத்து விளங்குவது காண்க. முச்சுடர் - சூரியன், சந்திரன், தீ என்பவை. முச்சுடர் முந்தி (வந்து) ஒளியால் இருட்குவையை விலக்கும் என மாற்றிப் பொருள் கொள்க. மனத்து இருள் - அறியாமை, அஞ்ஞானம். உன் பேர் அணியும் பெருமை என்றது, சீவகசிந்தாமணி என்ற நூலின் பெயரை அம் மணி கொண்டிருப்பதனை. சிந்தாமணி என்ற பெயரே கொடைத் தன்மையுடைமைக்குக் காரணம் என்பது கருத்து. தணியும் - தாழ்ந்து கிடக்கும்; சரிந்துகிடக்கும். ஆரம் எனக் கூட்டுக. கண்டம்-கழுத்து, சரம் - மாலை. கண்டத்தில் அணியப்பட்டு அதனளவிற் கிடப்பன கண்ட சரம் எனக்கொள்க. அலங்காரமே என்பது தமிழை விளித்ததாம். அன்றியும் எல்லாம் அலங்காரமேயாம் எனக் கொள்ளலும் ஆம். புலம் - அறிவு, அறிவுதரும் பொருளையும் பொன் என்ற பொருளையும் ஒன்றெனக் கருதலாமோ என்ற கருத்தமைய உன்னைப் பொருளென்றுரைக்குந்தொறும் என்றார். உரைக்குந்தொறும் - பேசும் பொழுதெல்லாம் எனவும், கல்லில் தேய்த்துப் பார்க்கும் பொழுதெல்லாம் எனவும் இரு பொருள் தந்தது. நீ வளர்வாய் என்றது அப்பொன் தேயும் என்ற குறிப்புக் காட்டியது. உரைக்கவுரைக்கப் பெருகும் கல்வியாகிய உன்னையும், உரைக்க உரைக்கத் தேயும் பொன்னாகிய பொருளையும் பொருள் எனப் பெயர் கூறுவது சிறிதும் பொருத்தமற்றது என்ற கருத்துத் தோன்றப் 'பொருளென்னப் போதுமோ' என்றார்: கள்வராலும் மன்னராலும் கவரப்படுங் கைப்பொருள் அழிந்துபோம் இயல்

புடையது. கல்விப்பொருளைப்போல என்றுந் துணையாயிருந் துதவிபுரிவதன்று என்று செல்வப் பொருளை இழிவு கூறி யது இது. "கேடில் விழுச் செல்வம் கல்வி யொருவற்கு மாடல்ல மற்றை யவை" (குறள் 400). "வைப்புழிக் கோட் படா வாய்த்தீயிற் கேடில்லை, மிக்க சிறப்பினரசர் செறின் வவ் வார், எச்ச மெனவொருவர் மக்கட்குச் செய்வன, விச்சை மற் றல்ல பிற" (நாலடி 134). "அறம் பொருளின்பமும் வீடும் பயக்கும், புறங்கடை நல்லிசையும் நாட்டு—முறுங்கவலொன் றுற் றுழியுங் கைகொடுக்குங் கல்வியினூங் கில்லை, சிற் றுயிர்க் குற்ற துணை" (நீதிநெறி விளக்கம் 2.) இவற்றின் கருத்துகளை யொப்பிட்டுக் காண்க.

88-96 : நன்னெறியின்.........இன்சொல்லாய்

(பொ - ரை.) மண்ணுலகத்தில் நல்லொழுக்கமுடன் புகழ் வடிவமாய் வாழ்வதற்கும், அவ்வாறு வாழ்பவர் பின் விண்ணுலகம் சென்று தெய்வ வடிவமாகப் பொருந்தி யின்பந் துய்த்து வாழ்வதற்கும் ஆராய்ந்து உன்னைத் துணையாகக் கொண்டு புகழ் அடைந்தவர்க்கே கூடும். உன்னைக் கூடாது வாழும அடியார்க்குத் தென்பால் உள்ள எமனுலகமே கிடைக்கும். குளிர்ந்த தமிழ்மொழியே! இவ்வுலகின் உன் (தமிழ்ச்) சங்கத்தால் சிவபெருமான் உயர்வு பெற்றுரோ? உயர்ந்த அப் பெருமானால் நீ யுயர்ந் தனையோ? தாமரைப் பூவை வீடாகக் கொண்டுறையும் கலைமகள் அங்கையின் மேலே நீ யிருந்தனையோ? உன்னை எட்டு வடிவமாக்கி யதன்மேற் கலைமகள் இருந்தனளோ? ஆடும் பாம்பாகிய தாழ்ந்த பாயலுடைய திருமாலை நீ தானே பின்றொடர்ந்து சென்றனையோ? அத் திருமால்தாம் சுருட்டிய பாயுடன் உன்னைப் பின்றொடர்ந்தனரோ? அகத் திய முனிவர் முருகக் கடவுளை நோக்கி "என் வாழ்வே தமிழ்மொழியினைக் கற்பிக்க வேண்டும்" என்று கேட்க வுனே முருகக் கடவுள் அம் முனிவர்க்குக் கற்பித்தனரோ? ஒளியே! அம் முனிவரைக் கற்குமாறு நீதான் உரைத்தனை யோ? வேறுபடாதஎன் அன்பர் சிவபெருமான் உனக்குப் பொருளாக முன் நின்றுரோ? நீண்ட மதுரையில் வீற்றி

ருக்கும் அப் பெருமானுக்குப் பொருளாக நீதான் வந்தனை யோ? இவை என் மனத்தெழுந்த ஐயங்கள்; இவற்றை நீக்குமாறு அறியேன். மயக்கமுற்ற என் செயலினை யாய்ந்து கண்டு மனமிரங்கி உதவிபுரிவதே நீதியாகும். உன் செய்திகள் எல்லாவற்றையும் நானே சொலத் தகுதியுடையேன்; இனிய சொற்களையுடைய தமிழே.

(வி - ம்.) உனைக்கொண்டு புகழ்கொண்டவர் என்றது, தமிழ்ப்பாடல்களை யேற்றுப் புலவர்க்குப் பொருள் வழங்கிப் புகழ் பெற்றவள்ளல்களை யுணர்த்தியது; அவர்களே புகழ் வடிவமாக மண்ணில் வாழ்பவரும் விண்ணில் தெய்வ வடிவ மாக மேவி வாழ்வோருமாவர் ஆதலின், "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவ னேவா வான வூர்தி எய்துப என்ப" (புறநா-27) அக் கருத்து ஈண்டு அமைந் திருப்பதறிக. தொண்டருக்கு என்பது, உனைக்கூடாத என்ற குறிப்பினால் ஆசைக்கு அடிமைப்பட்டவர்கட்கு எனப் பொருள் தந்தது. மண்ணாசை முதலிய ஆசைக்கு அடிமை யாயுழன்று பலவகைத் தீவினை புரிந்து பாவியர் ஆவார் எனவும், அவர் எமனுலகத்திற்கே யேகுவர் எனவும் கருதித் "தென்பாலே தோன்றும்" என்றார். ஆல்: அசை. தென் பால்-தெற்குத் திசை. அத் திசையில் யமனுலகம் இருப்பது எனக் கூறுவது நூன்மரபு. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் ஈசர் இறையனார் என்ற பெயருடன் சேர்ந்து தமிழாராய்ந்த வரலாற்றினை யுட்கொண்டு ஈசருயர்ந்தாரோ! நீ யுயர்ந் தாயோ? என்றார். கலைமகள் கரத்தில் ஏட்டுச்சுவடியிருப்ப தாகக் கூறுவர் புலவர். கலைகட்குத் தெய்வம் அவளாதலின் அவள் திருவடிக்குக் கீழ்க் கலைகள் எல்லாம் தங்கி அவளைத் தாங்க வேண்டுவதுதானே இயற்கை? அதற்கு மாறாக வாணியின்கை மேலேயிருந்தாய். காரணம் ஏனோ அறியேன். தமிழ் இனிமை கருதி இருத்தினள் போலும் என்ற பொருள் குறிப்பிற் புலப்படுவது காண்க. "புத்தகம் படிகமாலை குண்டிகை பொருள்சேர் ஞான, வித்தகந் தரித்த செங்கை விமலையை" (கம்பர். காப்பு) எனவும், "இன்னங் கலைமகள் கைமீதிற் புத்தகமேந்தி யந்தப், பொன்னம் புயந்தனிற் புக்

இருந்தாள்' (தனிப்பாடல்) எனவும் வருவன புத்தகம் ஏந்தியதை யுணர்த்தும். தாழ்பாயலாளர் : இது வினைத் தொகை. தாழ்குழல் என்பது போலச் சரிந்த பாயல் எனப் பொருள் கொள்க. பாம்பு என்ற தாழ்வான (இழிவான) பாயல் எனினும் பொருந்தும். "உன்னைத் தொடர்ந்தாரோ" என்றது, திருவெஃகாவிற் கோயில் கொண்டுரையும் பெரு மாள் முன்னின்று திருமழிசையாழ்வார் "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி. மணிவண்ணா நீ கிடக்க வேண்டாம் - துணிவுடைய, செந்நாப் புலவன்யான் செல் கின்றே னீயுமுன்றன், பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்" என்று பாட அவர் பின்னே பாயைச் சுருட்டிப் பெருமாள் சென்றனர் என்ற வரலாற்றையுட்கொண்டது. இதன் விரிவு திருமழிசையார் வரலாற்றுட் காண்க. தமிழின் பொருட்டே பின் சென்றனர் என்பதைக் குமரகுருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்க் காப்பில் அமைத்திருக்கும் பான்மையறிக. "கணிகொண்ட பூந்துழாய்க் காடலைத் தோடுதேங் கலுழி பாய்ந், தளறு செய்யக், கழனிபடு நடவையிற் கமலத்தணங் கர சொர்க்கையணை முகந்து செல்லப், பணிகொண்ட துத்திப் படப்பாய்ச் சுருட்டுப் பணைத்தோ ளெருத்த லைப்பப், பழ மறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலே" என்பது பாடல். முனி என்பது முன்பின் வந்த குறிப்பால் அகத்தியரை யுணர்த்தியது. சோதி - ஒளி. இதனை விளியாக்குக. அவரை - முருகரை. அகத்தியருக்கு முருகக் கடவுள் தமிழினைக் கற்பித்தார் என்பது "அகத்திய னார்க்குத் தமிழைச் செவியறிவுறுத்திய செந்தமிழ்ப் பரமா சாரியனாகிய அறுமுகக் கடவுள்" (தொல் சூத்திரவிருத்தி) எனவும், "குறுமுனிக்குந் தமிழுரைக்கும் குமரமுத்தந் தருகவே" (திருச்செந்தூர்ப்பிள்ளைத் தமிழ) எனவும், 'சிவனை நிகர் பொதியவரை முனிவனக மகிழவிரு செவிகுளிர வினிய தமிழ் பகர்வோனே" (திருப்புகழ்) எனவும் வருவனவற்றால் அறியலாம். பேதியாநேசர் மதுரை வாசர் என்பது சொக்க நாதரை. பேதியா - வேறுபடாத; நேசர் எனக் கூட்டுக. கருத்து வேறுபடாத காதலர் எனத் தலைவி கூறியது இது. பொருள் என்றது அகப் பொருளிலக்கணத்தை, நீதான்

அவர்க்குப் பொருளிலக்கணமாக வந்தாய் என்பது கருத்து. என் செய்தி கண்டிரங்குவதுதான் நீதியாம். உன் செயல் எல்லாம் உரைத்துப் புகழ என்னாலியலுமோ? இயலாது என்க.

### 97 - 101 : கற்க கசடறக்..................காணுதே

(பொ - ரை.) கற்க என்ற குறட்பாவின் சொற்களால் எல்லார்க்கும் அறிவுரை இயம்பிக் கரையேற்றவல்லை நீ; உனக்கு அறிவுரை கூற வல்லனோ நான். சொல்லியவுன் திருக்குறளாகிய இரண்டடிக்குள்ளே உலகம் எல்லாம் அடங்குமெனின் நேரடியாகிய நாலடிக்கு வேறு நிலம் உளதோ? இல்லை. ஓரடிக்கு ஆயிரம் பொன் சிதறிய ஐயராகிய சிவபெருமானைத் தெருவிற் சென்று பரவைபால் வேண்டித் தூது சொல்லுமாறு போக்கினை. அவ்வாறிருந்தும் பெருமையாக ஒரு தூது சொல்லிவா என்று நான் கூறு இன்றேன். இஃது என் பெண்மதி; இது குறித்து ஆராயாதே. என காம நோய் வருத்தத்தை மட்டும் குறித்து ஆராய்ந்து பார்.

(வி - ம்.) கற்க என்ற குறட்பாவில் கற்கத்தக்க நூல்களைக் கற்க வேண்டும் கற்றதற்குத் தக்கவாறு நிற்க வேண்டும என்று வகுத்துரைத்துள்ள விதி எல்லா மக்கட்கும ஏற்றதாதலுணாக நூல்களை யாய்ந்து நன்னூலைக் கற்று நல்வழியொழுகுவது மாந்தர்க்கெல்லாம் வேண்டுவது என்பது தானே விளங்கும், ஈரடிக்குள்ளே யுலகமெல்லாம் அடங்கும் என்றது, "மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான், ஞால முழுது நயந்தளந்தான்—வாலறிவின், வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தா, ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து" என்ற திருவள்ளுவ மாலைச் செய்யுட் கருத்தினை யெடுத்துக் காட்டியதாம். குறணூலில் அடங்காத நீதியொன்று மின்று என்பதுதான் கருத்து. ஈரடி என்பது, இரண்டடியாலாய பாவிற்குப் பெயராய்ப் பின் அப் பாவாலியற்றிய நூலிற்காயிற்று; இருமடி யாகுபெயர். நேரடி:நான்கடி; இது

நான்கடியாலமைந்த நாலடியார் என்ற நூலினை யுணர்த்தும். மற்றை நான்கடிப் பர்விஞலியற்றிய எல்லா நூல்களையும் குறிப்பதாகவுங் கொள்ளலாம். திருக்குறளிற் கூருத நீதி மற்றை நூல்களிற் கூறப்பட்டில. ஆதலால் அவை நுழைவதற்கு இடமில்லை. இஃது ஒன்றே சூழ்ந்து நின்றது. 'ஆயிரத்து மூநூற்று முப்ப தருங்குறளும், பாயிரத்தி ேனாடு பகர்ந்ததற்பின் - போயொருத்தர் வாய்க் கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ ராய்க்கேட்க விற்றிருக்கலாம்'' என்ற பொருளமைந்தது ''விலனுண்டோ'' என்பது. ஆயிரம் பொன்னிறைக்கு மையர்! திருவாரூர் வீதிவிடங்கப் பெருமான் ''கனகமோடிக் காயிர நல்குமெங் கடவுள்'' (திருவாரூப் . நகரச் 47) எனவும், ''அடியொன்றுக்குய்யும் படிமசுபபொ ேனாாயிரமுகந்து, பெய்யுங் கருணைப் பெருமானே,'' ''பெய்யுமடிக் காயிரம் பொன்னென்னப் பேறளிக்குங், கையுமிரப்புங் கலந்திரே'' (திருவாரூருலா 173-4, 429) எனவும் வருவன காண்க. சுந்தரமூர்த்தி நாயனர் பாடும் போதெல்லாம் பொன்னளித்ததைப் பாராட்டியவை இவையென அறிக. தூது சொல்லப் போக்கியது- சிவபெருமானைப் பரவை நாச்சியாரிடம் தூது சொல்லி வருமாறு செய்தது. தமிழ் குறித்துத் தான் அவர் தூது சென்ருர் என்ற கருத்து வெளிப்பட்டது சுந்தரர் தூது சொல்லுமாறு பாடல் பாடினர் என்ற வரலாறின்று ஆயினும் தூது சொல்லுமாறு வேண்டித் துதித்தனர் எனப் பெரிய புராணம் கூறுகின்றது. ''பாதஞ் சிவக்கப் பசுந்தமிழ் வேண்டிய பரவை தன்பாற் றூதன்று சென்ற தென்னூரர்த் தியாகர்'' (திருவாரூர்க் கோவை) எனவும், 'தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை, யுண்ட பாலனை யழைத்தது மென்புபெண் ணுருவாக், கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித், தண்டமிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்'' (பரஞ்-திருவிளையாடல்) எனவும் பாடிய பாடல்கள் தமிழின் பொருட்டுத் தூது சென்றனர் என்பதை விளக்குகின்றன. ஓரடிக்காயிரம் பொன்னிறைக்கு மையரைத் தூது போக்கியவுன்னை நான் தூது போக்கக் கருதுகின்றேன்; என் பெண்

மதியால். என் காதல் நோயை மட்டும் கருத்துட்கொண்டு தூது சொல்; இழிவென் றெண்ணாதே என்று கூறினள்.

101 - 106 : ஆண்பனைநற்............புரிகண்டாய்

(பொ - ரை.) ஆண்பனையை நல்ல பெண்பனை யாக்கினை நீ; பெண்களில் காரைக்கால் என்ற வளமான பதியில் வாழ்ந்த அம்மையாராகவும், ஔவையாராகவும் வந்து நீ தோன்றினை; ஈண்புடைய திலகவதியாருடன் பிறந்தனை; மாளிகை வரிசையுடைய தவமும் தியானமும் உடையவர், வாழும் மதுரைப் பதியில் மிகுந்த தவஞ் சேர்ந்த அக்க வடமும் வெண்ணீறும் அணிந்த மேனியுடைய அடியார்களைக் கண்டுருகு மானியார்க்கு ஆசாரியனாக வந்து தோன்றினை; இசை ஞானியாருடைய உயர்ந்த மகவாகத் தோன்றி வனப் பகைக்கும் சிங்கடிக்குந் தந்தையாகிப் புகழை வளர்த்தனை; இவ்வுலகிற் பெண்களெல்லாம் நல்வாழ்வு வாழ்வது கருத நீ தோன்றினமையால் பெண்ணாகிய என் மனத்தெழுந்த கவலையெல்லாம் நீங்கச் செய்வாய்.

(வி - ம்.) ஆண்பனையைப் பெண்பனையாக்கியவர் திரு ஞானசம்பந்தர். அவரையே தமிழாகக்கருதிக் கூறியது இது. திருவோத்தூரில் ஒரு சிவனடியார் பொருட்டுத் திருஞான சம்பந்தர் ஆண்பனை யத்தனையையும் பெண்பனைகளாகச் செய்தனர் என்பது வரலாறு; திருவோத்தூர்ப் பதிகப் பாடல் காண்க.

"மன்றிற் பனைவடிவ மாக்கினை"(162) என்பர் பின்னும். "ஆண்பனை பெண்பனை யாக்கிய வித்தக வாடுக செங்கீரை" (பிள்ளைத்தமிழ்) என்றார் ஒரு பெரியார். காரைக்காலம்மை யாரும் ஔவையாரும் நீயே (தமிழே) என்பது. காரைக் கால்...வந்துதித்தாய் என்ற தொடரின் பொருள். திலக வதியாருடனே சென்மித்தாய் என்றது திருநாவுக்கரசராக நீ பிறந்தாய் என்ற கருத்து விளக்கியது. மாடக்குலக கூடல் எனவும் தவ தியானத்தர் கூடல் எனவும் கூட்டுக. மாடக் குலங்களைக் கொண்ட கூடல் எனவும் தவ தியானத்தரைக்

கொண்ட கூடல் எனவும் விரித்துக் கொள்க. பல தவஞ் சேர் மேனியார் என்றது சிவனடியார்களை. பல பிறப்பு களிற் செய்த தவத்தாற் சேர்ந்த திருமேனி யுடையார் என அடியார்களைச் சிறப்பித்ததாம். அது அவரணிந்துள்ள கண்டிகையும்...மானியார் எனக் கொள்க. மானியார் என்றது மங்கையர்க்கரசியாரை. "மங்கையர்க்கரசி வளவர் கோன்பாவை வரிவளைக்கை மடமானி" எனப் புகழப்பட்ட வர் அவரே யாதலின்; மானியார் - மான முடையார்; நாண முடையவர். தேசிகன் - குரு, ஆசிரியன். ஞானியார் என்றது இசை ஞானியார் என்பவரை. இவரே சுந்தர மூர்த்தியாரின் அன்னையராவர், துங்கம் - உயர்வு. மவு- குழந்தை. சுந்தரமூர்த்தி நாயனுர் மகவுடையாரல்லர். கோட்புலி நாயனுருடைய மக்கள் வனப்பகையார், சிங்கடி யார் என்பவர். இவரிருவரையும் தம் மக்களாகப் பாவித்து வனப்பகையப்பன், சிங்கடியப்பன் எனத் திருக்கடைக்காப் பில் வைத்துப் பாடியதால் "தாதையாச் சீர்செய்தாய்" என்றுள். இவ்வாறு பெண்பனையாக்கியது முதல் வனப் பகை சிங்கடிக்குச் சுந்தரரைத் தந்தையாக்கினது வரையுள்ள செயல்கள் யாவும் பெண்கள் நல்வாழ்வு வாழவேண்டும் என்ற நோக்கத்தாற் செய்த செயல்களாக எனக்குத் தோன்றுகின்றன, ஆதலான் என் கவலையும் தீர்ப்பாய் என்றனள்.

### 107-112 : ஒண்கமலத்...கூறுகேன்

(பொ - ரை.) ஒளி பொருந்திய தாமரை மலரில் இருக் கும் அன்னத்தைத் தூதாக விடுக்கக் கருதினேன். அன்னப் பறவை அங்குள்ள சொக்கநாதரை இன்னமுங் கண்டறிந்த தில்லை யெனச் சொல்வாரே! பொருந்திய என் தந்தையே! அவ்விடத்திற்கு ஒரு வண்டைத் தூதாக விடுப்பம் என எண்ணின் அவர் காமஞ் செப்பாதே யென்றால் அது திகைக்கும் அன்றோ; தவருமல் மானைத் தூது போய்ச் சொல்லிவா என்று விடுக்கக் கருதின் அம் மானும் அழகிய புலித் தோலாடை யுடுத்தவர் எனக் கண்டஞ்சி அவர்பாற் சாராமல் வந்து விடுமே. மற்றும் அழகிய குயிலை நான்

விடுக்கக் கருதினால் அக் குயிலும் காக்கையின மாதலால் வலியான் என்ற பறவைக் கஞ்சி அவர்பாலணுகாதே; இந்த என் மனத்தையே தூதாக விடுக்கலாம் என்றாலோ என் மனமும் அந்த மனத்திற் கெட்டாதவரைக் கண்டு எங்ஙனஞ் சொல்லும், அதுவும் அணுகாதே; பின் எந்தவிதம் யாரைத் தூது விடுப்பது என்றுழன்றேன், வருந்தினேன்; ஆதலால் என் கவலையெல்லாம் பொன்மலை போன்றாயே! உன் பாலே கூறுகின்றேன், நீ கேள்.

(வி - ம்.) கமலத் தன்னம் என்றது பிரமனையும் உணர்த்தும், அவனும் கமலமலரில் இருப்பவனாதலின். பிரமன் அன்ன வடிவங்கொண்டு சிவபெருமான் திருமுடியைத் தேடியறியாமல் மீண்டுவந்தான் என்ற வரலாற்றினையுட்கொண்டு இன்னந்தான் கண்டறியாதென்பரே என்றாள். என்பார் அறிவுடையோர் எனக்கொள்க. "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி, காமஞ் செப்பாது கண்டது மொழிமோ" என்ற கவி சொக்கநாதர் பாடியது. வண்டு போய்நின்றவுடன் காமஞ் செப்பாது கண்டது மொழிமோ என்று அவர் கூறுவர். கூறினால் அது காமநோய்கொண்ட ஒரு பெண்ணின் கவலையை இவரிடத்திற் கூறுவதெங்ஙனம்? "காமஞ் செப்பாது" வேறு கண்டதைச் சொல் என்றல்லவோ கூறுகின்றார் என்று திகைத்துச் சொல்லாது திரும்புமன்றோ? காமம் என்ற சொற்பொருள் அதற்குத் தோன்றுமோ என்ற கருத்து விளங்கிற்று, (குறுந்தொகை2) அப் பாடல் காண்க. வல்லியம் - புலி. பூந்தானை - அழகிய உடை. புலித்தோலுடுத்த பரமர்பால் மான் செல்லுமோ? செல்லாதென்றாள். பூங்கோகிலம்-அழகிய குயில். வலியான் என்பது ஒருவகைப் பறவை; அது பறவைகளையெல்லாம் அடித்துத் துரத்தும். அதனால் வலியான் எனப் பேர் பெற்றது. காக்கைக்கும் வலியானுக்கும் கடும் பகை. வலியான் - கரிக் குருவி. இப் பறவை மதுரையிற் சொக்கநாதரை வழிபட்டு வலியான் என்ற பெயரும் பெற்று உண்மைஞானம் உபதேசிக்கப் பெற்றுச் சிவபதவி பெற்றது என்பது வரலாறு. திருவிளையாடலில் இதன்விரிவு காண்க.

சிவபதவி பெற்ற வலியான் சிவனருகில் இருக்கும், அதனைக் கண்டு காக்கையினமாகிய குயில் அஞ்சும் எனக் கற்பித்ததாயிற்று. மனோதீதர்—மனத்தைக் கடந்தவர். இது வடமொழி. மன + அதீதர் = மனோதீதர். அண்டாது—அணுகாது; நெருங்காது. ஆதலால் உன்னைத் தூதாக விடுக்கக் கருதினேன் கூறுகின்றேன் என்பது குறிப்பு. தூதுவிடும் பொருள்கள் "இயம்புகின்ற காலத்தெகினமயில் கிள்ளை, பயம்பெறுமே கம்பூவை பாங்கி - நயந்தகுயில், பேதைநெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" எனக் கூறப்பட்ட பத்தில் மான் சேர்ந்ததன்று எனினும் மான்விடுதூது என நூல் ஒன்று பிற்காலத்தார் இயற்றினர்; அதனால் மானையும் உடன் சேர்த்தனர். அன்றியும் வனசவிடுதூது, நெல்விடு தூது, துகில்விடு தூது முதலியனவும் உள்ளன. புகையிலை விடு தூதும் உள்ளது போலும். புலவர்கள் பிற்காலத்தில் தாம் நினைத்த பொருள்களை யெல்லாஞ் சிறப்பித்துத் தூது என்ற நூல் பாடினர் என்பதற்குத் தமிழ்விடுதூதும் சான்றாம்; பொன்மலை போன்றாய் என்றது தமிழ்மொழியை; அஃது என்றும் அழியாது நிற்பது என்ற கருத்தினை விளக்கியது. மூவாத் தமிழ், கன்னித் தமிழ் என வருவன காண்க.

### 112 - 119 : சென்றாலும்......விளையாட்டொன்றே

(பொ - ரை.) நீ தூது சென்றாலும் முன்னோரியற்றிய பத்தொன்பதினாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொன்று என்ற கணக்குடைய தொடைக்கு உரிமையுடையாய், போய் ஒரு தொடை வாங்கி எனக் குதவாயோ? உதவுவை. ஒரு விடைக் கொடியுடையவர்க்கு நீ வேறா? ஒற்றுமை யுடையை. முன் சொக்கநாதர் தருமி என்னும் மறைய வனுக்கு இல்லற வாழ்க்கை பெறுவதற்காக உயர்ந்த பொற்கிழி யுதவும் பொருட்டுக் "கொங்குதேர் வாழ்க்கை" யென்றெடுத்துக் கூறிய பாடலும், நக்கீரன் பொருத்த மின்றிச் சொற்போர் புரிந்தான் என்று, அவனை இகழ்ந்து சொற்போர் புரிந்த வாக்கு வன்மையும், பண்ணோடு

கூடிய பாடலுக்கு மனமிரங்கி ஒரு பாணபத்திரனுக்குச் சேர மன்னனிடம் போய்க் கொடுக்குமாறு சீட்டுக்கவி வரைந்து கொடுத்த சிறப்புச் செயலும், பாட்டின் இலக்கணத்தில் நாவின்கண் உறுதியாகக் கூறப்படும் பொருளிலக்கணத்தை நன்றாக அறுபது நாற்பாக்களால் ஆக்கித்தந்த காட்சியும் ஆகிய இவை மட்டுமோ? உன்னோடு கூடியவர் விளையாடியது ஒன்றுதானோ? பலவுள்ளன.

(வி - ம்) தொடை-செய்யுட்குரியது; மோனை எதுகை முதலியவை; தொடை மாலை எனவும் பொருள்படும். 13291 என்று தொடையின் தொகை கூறியது, தொல்காப்பியம் செய்யுளியலில் "மெய்பெறு மரபின்" (101) என்ற சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் வகுத்த உரை விளக்கத்தை யுட்கொண்டதாம். ஒரு தொடை-ஒரு மாலை; சிவபெருமான் கொன்றைமாலை. தூது சொல்வோர் மாலை வாங்கிவந்தால் காதலர் வரவுக்குடன்பட்டார் என்பதைக் காதலிக்கு அறிவிப்பதாம்; மாலையைத் தந்த மன்னர் வருவதும் அக்கால வழக்கு. அன்றிரவே அவர் வரவே யுடன்பட்டார் என்பது மாலைதந்ததால் அறிவள். இரவு வரவை யெதிர் நோக்கியிருப்பள் காதலி. சே - விடை, காளைமாடு. விருது - கொடி, வேறே என்பது ஒன்றுபட்ட வாழ்வுடையவர் என்பதை யுணர்த்திற்று. செய்தி - செய்யுள், செயல் எனலுமாம். பொற்கிழி - பொன் முடிப்பு. ஆயிரம் பொன்னை ஒரு துணியில் முடித்துக் கட்டிப் பாண்டியன் தன் வாயிலின் முன் தூக்கி என் கருத்தறிந்து பாடியவர்க்கு இப் பொற்கிழி உரியதாம் எனக் கூற, அதுகண்ட புலவர் பலரும் பாடிப் பயன் பெறாதிருந்தபோது தருமி வந்து 'சொக்கநாதரை வேண்ட, அம் மறையோன் பொருட்டுக் 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற பாடல்பாடிக் கொடுத்தனர் என்பது வரலாறு; தருமிக்குப் பொற்கிழியளித்த திருவிளையாடல் காண்க.

வசையாடி - இகழ்ந்துபேசி. வாக்கும் - தமிழ்ச்சொல் வன்மையும். பாண பத்திரன் யாழ்மீட்டி இசைபாடுவோன் ஆதலின் "இசையான பாட்டு" என்றார். சேரலன் -

சேர மன்னன். இது சேரமான் பெருமாணாயனாரைக் குறித்தது. சீட்டுக்கவி: "மதிமலி புரிசை மாடக் கூடல்" என்ற முதற் குறிப்புடையது; திருமுகப்பாசுரம் எனப் பெயர் பெற்றது. நாதிரமா மேவு பாட்டு இயலில் எனக் கூட்டுக. நாவில் உறுதியாகப் பொருந்தும் பாட்டிற்குரிய இலக்கணங்களில் ஒன்றாக உள்ள பொருளிலக்கணம் எனக் கொள்க. இறையனாரகப் பொருள் அறுபது சூத்திரங்களைக் கொண்டது, சிவபெருமான் பாடித் தந்தது என்பது. "அன்பினைந் திணையென் றறுபது சூத்திரங், கடலமு தெடுத்துக் கரையில் வைத் ததுபோற், பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத் தெளிதரக் கொடுத்த தென்றமிழ்க் கடவுள்" என்பது கல்லாடம் (3). கொங்குதேர் வாழ்க்கை என்ற பாடல் நீ; நக்கீரனோடு சொற்போர் புரிந்த சொற்கள் நீ; சிட்டுக்கவி நீ; இறையனாரகப் பொருளிலக்கணமும் நீ; உன்னைக் கொண்டே சிவபெருமான் விளையாடினர்; இவை போலப் பல விளையாடல் உள. அவற்றையெல்லாங் கூற வியலாது என்னால் என்றனள்.

### 119-123: வடமதுரைச்...சொக்கருனக் குள்ளன்றோ

(பொ-ரை.) வடமதுரைக்கு உன்பிறகே அந்நாளில் யார் வந்தார்? சொக்கரல்லரோ வந்தவர்? காரியார் நாரியார் என்ற புலவர் இருவர் பாடிய கவியைப் பாதியாகப் பகிர்ந்துகொள்ள வழியில்லாக் காட்டில் இடையனாக வந்தவர் யார்? அன்போடும் போற்றி வழிபடும் பாணபத்திரன் பொருட்டு ஒரு கிழவர் வடிவமாகத் தோன்றி விறகு சுமந்துவந்தவர் யார்? தெளிவாக அப் பாணபத்திரற்கு ஒருவராலுங் கொடுத்தற்கு அருமையான சங்கப்பலகையைத் தந்தவர் யார்? இன்னும் அப் பத்திரனுக்கு அன்புடைய மனைவியாகிய விறலிக்குப் பகையாக வந்த விறலியை அவையிற் சென்று நீக்கி இசையில் வென்று வெற்றியைப் பத்திரன் மனைவிக்கே நிலைக்கும்படி செய்தவர் யார்? இவ்வாறு அரிய செயல்களை யெல்லாம் புரிந்தவர் சொக்கரல்லரோ? ஆய்ந்தால் மதுரைக் கோயிலினுள்ளே யிருக்கும்

சொக்கர் உனக்குளே யிருக்கின்றார் என்பது உண்மை யாகும்.

(வி - ம்.) காரியார் நாரியார் என்ற புலவரிருவரும் கவி பாடி வைத்துக்கொண்டு பாண்டியனைக் காண்பதற்கு ஒரு காட்டு வழி போம்போது சொக்கர் ஓர் இடையனாக வந்து வழிமறித்து அப் பாடல்களிற் பாதியைத் தமக்குத் தருமாறு வேண்டிப் பின் மறைந்தனர் என்பது திருவிளையாடல் கதை. இது பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலிற் காணப்படா தது. இதன் விரிவைத் திருவாலவாயுடையார் திருவிளை யாடல், காரியார் நாரியார் பாப்பகுந்த திருவிளையாடலிற் காண்க. நாரிெனாடும் - அன்புடன், கிழவுருவில் தோற்றி, போந்து எனக் கூட்டுக. தேற்றி - தெளிவித்து. ஈ அரிய - ஈவதற்கு அருமையான. ஏனைய செல்வர்களால் கொடுக்க முடியாத பொருள் சங்கப்பலகை எனக் கொள்க. நேர்ந் தவள் : விறலி. எதிராக - பகையாக. தாபிக்க - நிலை நிறுத்த : திருவிளையாடற் புராணம் விறகு விற்ற படலம், பலகையிட்ட படலம், இசைவாது வென்ற படலம் இவற்றுள் இவ்வரலாற்று விளக்கங் காண்க. பாணபத்திரன்பால் இசைத் தமிழாக நீ இருந்தாய், அவன் மனைவிபாலும் அதுவாயிருந்தாய். அது குறித்துச் சொக்கர் விறகு விற் பவராக வந்து இசைபாடிப் பத்திரனுக்கு வெற்றி தந்தார்: இசைவாது வெல்வதற்கும் இவர் திருவருளே துணையாயது. பாணன் மனைவியும் வெற்றியடைந்தாள். இவற்றை யாய்ந்தால் தமிழாகிய உனக்குள்ளே சொக்கர் உலாவுகின் றார் என்பது வெள்ளிடையாம் என்பது.

## 123 - 131 : எவ்வி.........பகராதோ

(பொ - ரை.) தமிழ்மொழியை இகழ்ந்து வடமொழியி லுள்ள மறைமொழிகளே ஈசர்க்கு உறுதியான மொழியாம் என்று சிலர் கூறுவர்; அஃது அறியாமையே. வேற்று மதங்களை யழிக்கின்ற சிங்கமாக நீ பிறந்து பாண்டி நாடு முழுவதும் சைவசமயத்தை நிலைநிறுத்திய வந்நாளில் விரை வாக வந்து முதலில் வையை நதியில் மறையாகிய சைவாக

மத்தை நிலைநிறுத்தினை. ஆய்ந்து நோக்கின் ஏடகம் என்ற இடமே அதனைச் சொல்லுமன்றோ? மறையாகிய தெய்வத்தால் சூரியன் ஒளியும் அங்கு நுழையாது அடைத்த கதவினைத் திறந்தாய்; அச் செயலை மறைக்காட்டுத் திருக்கோயில் கண்டால் அதுவே சொல்லும். வேதமானது அமிழ்தினும் இனிமைமிக்கது என்று வடமொழியைக் கற்ற அகத்திய முனிவர்க்கு என் அன்பராகிய சொக்கநாதர் உன்னை (தமிழ் மொழியை)க் கற்பித்தார். இச் செய்தியைத் தமிழ் முனிவன் என்று அகத்தியனுக்கு வந்த பெயரே அறிவிக்கும். தமிழ்மொழியால் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பொருளை முப்பாலாக வகுத்துப் பிரமன் (திருவள்ளுவராகப் பிறந்து) பாடினன். அச் செயலினைப் பரமராகிய சிவபெருமான் பாடிய பாடலே சொல்லுமன்றோ? மறக்க முடியாத கல்வியின் அளவெல்லாங் கூறும் மறைகளாற் காணப்படாதவர் ஆய சிவபெருமான் கீழே நிற்கவும் நீ அழகிய சங்கப் பலகையின்மேல் ஏறியிருந்தாய். இதுவொன்றே போதாதோ? சொக்கநாதருடனே அளவிறந்த நரிப்பரியையும் முன் அழைத்தாய் நீ, நான்கு மறைகளையும் கல்லணையுடைய குதிரையாக்கியதும் சொல்லும்.

(வி - ம்.) சிலர் என்றது வடமொழி தமிழினுஞ் சிறந்தது என்பவரை. எள்ளி-இகழ்ந்து, தமிழ்மொழியை எள்ளி, ஈசர்பேசுமொழி வடமொழிதான் வேதவசனம் தான் என்பார். அவர் அறிமாமையுடையோர். ஈசன் செயல்களை ஆய்ந்து நோக்காதார் என்பது கருத்து. அக் கருத்தினை நிலைநிறுத்துதற்குப் பின்வருஞ செயல்களைக் கூறுகின்றாள் என்று கொள்க. பரசமய கோளரி என்ற பெயர் திருஞானசம்பந்தரை யுணர்த்தியது; அர சமயம் - அரனது சமயம் எனப் பொருள் கொள்க. எதுகை நோக்கி அரன் என்பது ஈறுகெட்டது: தொகுத்தல். இது சைவம். விரசும் - விரைவாகச் சென்ற. வேதாகமம் என்றது சைவாகமங் கூறிய திருமுகப் பாசுரத்தை. அது 'வாழ்க வந்தணர்' என்ற பதிகம் வரைந்த ஏட்டினை யுணர்த்திற்று. வையையாற்றிற் சமணர்களுடன் சம்பந்தர் சொற்போர்

புரிந்து முடிவில் ஆற்றில் விட்ட ஏடு எதிரேறிச் சென்று தங்கிய இடம் ஏடகம்: ஏடு நின்ற இடம் அப் பெயர் பெற்றது. ஏடகமே (தமிழ் மொழியாகிய) உன் சிறப்பினை யுணர்த்தும். வேதமந்திரம் என்றாலும் அது செந்தமிழில் வரையப்பட்டுச் சிறப்புற்றது. வேதத்தேவு ஆதவன் அங்கு அண்டாது எனப் பிரிக்க. வேதமாகிய தெய்வத்தால் என விரித்து அடைத்த கதவம் எனக் கூட்டுக. ஆதவன் - சூரியன். அண்டாது - நெருங்காமல்; சூரியனொளி புகாமல் இருட்டறையாயிருக்குமாறு அடைத்த என்க. வடமொழி மந்திரத்தால், மறையோர்களால் அடைக்கப்பட்ட கதவு உன்னால் திறக்கப்பட்டது என்றால் வடமொழி எவ்வாறு நின்னினும் சிறந்ததாம்? வேதவனங் கண்டால் அஃது உன் பெருமையை விளம்பும். கண்டால்: அவ் வரலாற்றினை ஆய்ந்தால், "பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ, மண்ணி னூர்வலஞ் செய்மறைக் காடரோ, கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்,திண்ண மாகத்திறந்தருள் செய்ம்மினே" என்ற பதிகம் நாவுக்கரசர் பாடக் கதவு திறந்தது என்பது வரலாறு. வடமொழி மறையால் அடைக்கப்பட்டிருந்த கதவு (தமிழ் மொழியால்) உன்னால் திறக்கப்பட்டது என்றால் வடமொழி உயர்ந்தது என்று கூறுவார் கூற்றுப் பொருந்துமோ? வேதம் - வடமொழியிலுள்ள நான்கு வேதங்களும், என்னும் - என்று நினைத்து. அமிழ்தினும் சிறந்ததாகக் கருதி வடமொழியை மட்டும் கற்றிருந்த முனி என்க. அகத்திய முனிவர் அவர்.

அகத்திய முனிவர் சிவபெருமானை வேண்ட, அவர் முருகக் கடவுளிடம் தமிழைக் கற்பாய் எனக் கூற, அதன்படி அகத்தியர் சிவபெருமானருளாணையின்படி தமிழ்கற்றுணர்ந்தார். அதன்பின் தமிழ்முனி என்ற பெயர் தானே வந்தது. அன்பர் என்றது சிவபெருமானை. அவர்மேற் காதல் கொண்டவள் கூற்றாதலின் அப் பொருளைத் தந்தது "ஆதியிற்றமிழ நூலகத்தியர்க் குணர்த்திய மாதொரு பாகனை" என வருவதும் அறிக. தமிழ் முனி என்ற பெயரே தரும். உனக்கு உயர்வு தரும் என்க. ஆரணர் - பிரமர்;

வேதத்தை யுணர்ந்தவர் என்பது காரணம். ஆரணம் - வேதம். திருக்குறள் பாடிய வள்ளுவர் பிரமர்தாம் என்பது கருத்து. "தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி, அந்தா மரைமே லயன்" என்ற வள்ளுவமாலைப் பாவின் கருத்தை யுட்கொண்டது. அத்திறம் - அத்தன்மையை, பரமர் வாக்கு - இறையனார் பாடிய பாடல். "என்றும் புலரா தியாணர் நாட் செல்லுகினும், நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மைய தாய்—குன்றாத, செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன், மன்புலவன் வள்ளுவன் வாய்ச் சொல்" என்பது அது. இறையனாரே புகழ்ந்து பாடினா ரெனில் அதுவே உன் உயர்வைக் கூறியதாம். மறந்திடல் இல்-மறத்தல் இல்லாத. கற்பு-கல்வி. அலகை-அளவினை. ஓதுமறைக்கு என அடைமொழி யாக்குக. அத்தகைய மறையாற் காணப்படாதவர் கீழ்நிற்க நீ மேலிருந்தாய். இது போதாதோ உன் உயர்வு காட்டுவதற்கு என விரித்துக் கொள்க. தமிழே நீ சங்கப்புலவர்களாகிச் சங்கப் பலகை மேலமர்ந்திருந்தாய்; சிவபெருமான் கீழே நின்றார் என்பது. சிவபிரான் கீழே நின்றார் என்பதை, "மூவர் கட்கரியா னிற்ப முத்தமிழ்த் தெய்வச் சங்கப், பாவலர் வீற்றி ருக்கும் பாண்டி நன்னாடு போற்றி" எனவும், "வருந்திநான் முகன்மாறேட வளர்ந்தழற் பிழம்பாய் நின்றான், ஒருங்கிநீர் மண்ணும் விண்ணு மெங்கணும் நிரம்பி நின்று, னிருந்தமிழ்ச் சங்கத்தின்கீழ் நின்றன னெவருங் காண" எனவும் (திருவாலவாயுடையார் திருவிளையாடல்) வருவன காண்க. வாசி - குதிரை. தற்பரரோடு - சிவபெருமானோடு. வாதவூரடிகள் வாக்கி லிருந்து நீ சிவபெருமானையும், நரிப் பரிகளையும் அழைத் தாய். நால்வேதமும் அவர்க்குக் குதிரையாகவும் வந்தன. வாசியே பகரும் உன் உயர்வை, நீ யழைக்க வடமொழி நான்கும் பரியாய் மாறி வந்தன வென்றால் உன் பெருமை யுரைக்க வேண்டுமோ? வாசியே கூறும் என்க. சொல்லாதோ, விளம்பாதோ, தாராதோ, செப்பாதோ, போதாதோ, பகராதோ என வந்த ஓகாரங்கள் எதிர்மறைப் பொருளைத் தந்தன. சொல்லும் விளம்பும் எனப் பொருள்

கொள்க. வடமொழியினும் நீ (தமிழ்) உயர்வுடைமை என்பது இவ் வரலாறுகளால் விளங்கிற்று.

**131 - 139 : அண்ணலார்..............முறையுள்ளார்**

(பொ - ரை.) தலைவராகிய சிவபெருமான் தென்றிசையை விரும்பி வந்து நடிக்கும் செயலனைத்தும் உன்னிடத்தில் வைத்த அன்பினாலென்பதை அப்பாலுள்ள நாட்டிலும் அறியாதவர் யார்? உன் பெயரைப் (தமிழ் என்பதை) பழி நிறைந்த வேறுதிசைச் சொல்லுடையவர் திருத்தமாகச் சொல்லார். திருவாய் மொழியுடையார் குழறிக் குழறி உன் பெயரைச் சொல்வார், கெடாத வடிவத்தால் விரும்பி வேதங்களும் ஓதுதற்கரிய முத்திதரும் திருவாலவாயிற் கோயில் கொண்டுறையும் செல்வரும், ஒப்பற்ற திருமால் வடமதுரைக்கு வருமுன்னே வந்த வடிவம் இதுதான் என்று சொல்லுமாறு பெரிய மதுரையில் வந்து மீனக்கொடியை யுயர்த்தி அரசுபுரிந்த சுந்தர பாண்டியரும், துன்பத்தை நீக்கும் உமையம்மையின் ஒருபாகத்தில் அமர்ந்து மகிழ்ந்து ஒப்பற்ற சிவன்முத்திபுரம் என்ற மதுரைப் பதியில் மூலலிங்கமாக முளைத்துத் தோன்றியவரும், அத் திசை போல் எட்டு அயிராவதங்கள் என்ற யானைகள் சுமக்கும் அழகிய கோயிலுக்குள் வீற்றிருக்கும் புண்ணியனாரும், அதன் பக்கமாக இடமும் கோயிலும் இதுவேயாக இந்திரன் வந்து வழிபடும் கடம்பவனத்தில் தங்கும் ஒளியுடையவரும், கொல்லும் வாய்நுனியுடைய பெரிய அம்பாகிய திருமாலாலும் அறிதற்கரியவரும், மணிமுடியைப் புனைந்து இவ்வுலகத்தை யாண்ட முறையுள்ளவரும் ஆகிய சிவபெருமான்.

(வி - ம்.) "தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்" என்பது மணிவாசகம். அத் தொடரினையே யெடுத்தாண்டார் ஆசிரியர். உன்னிடத்தில் என்பது, தமிழை முன்னிலைப்படுத்திக் கூறுவதால் தமிழிடத்தில் என்றுகுறிப்புக் கொள்க. அப்பாலும் என்ற வும்மை இப்பால் அறிந்ததுமன்றி என எச்சப்பொருளைத் தந்தது. அயனாட்டாரும் அறிந்த செய்தியாம் அஃது என்க. சிவபெருமான் தென்பா

லுகந்தாடுவது தமிழின்மேல் வைத்த அன்பினுல் என்பதை, ''கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி, யடுக்க வந்துவந் தாடுவா னுடலி னிளைப்பு, விடுக்க வாரமென் காறிரு முகத்திடை வீசி, மடுக்க வுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றோ'' (திருவிளையாடல்) எனப் பரஞ்சோதி யார் பாடினர். பழி - நிந்தை, பழிக்கப்படுதல். ஆர் - நிறைந்த பழியார்ந்த திசைச் சொற்களைப் பேசுவோர்; பிற நாட்டினர். பன்னுர் - சொல்லமாட்டார். தமிழ் என்ற சொல்லிலுள்ள ழகரம் தமிழுக்கே யுரிய சிறப்பெழுத்து ஆதலின் அவ் வெழுத்தினை நன்ருக அழுத்தி உச்சரிக்கவறி யார் என்ற கருத்துத் தோன்றப் 'பன்னுர்' என்ருள். திரு வாய்மொழியார் என்றது நாலாயிரப் பிரபந்தத்தை வேத மென வோதும் வைணவ சமயத்தவரைக் குறிப்பாக வுணர்த் தியது. வைணவ மதத்தினர் மணிப்பிரவாள நடையுடைய பெரிய வாச்சான் பிள்ளை வியாக்கியான முதலிய வுரைநடை பயின்றவர் ஆதலின் திருத்தமாகப் பேசவறியாமற் குழறிக் குழறிப் பேசுவர் என்ருள். அழியா உருவால் அவாய் இருக் கும் ஓத அரிய எனப் பிரித்து, கெடாத வடிவத்தால் வேதங் களும் விரும்பித் துதிப்பதற்கு அருமையான செல்வர் எனக் கூட்டுக. செல்வர், தாணு, முளைத்தெழுந்தோர், புண்ணிய ணுர், காந்தர், அரியார், முறையுள்ளார், எனப் பின்வருவன வெல்லாம் சிவபெருமான் என்ற பொருள் குறித்த பல சொற்கள். ஆதலின் உம்மை கொடுத்து ஆகிய சிவபெரு மான் என முடிக்கப்பட்டது. தாணு - சிவன்: மீனக் கொடியைத் தமக்குரியதாகக் கொண்டவர் என்பது தோன்ற மீனுயர்த்த என்ருர். சுந்தர பாண்டியராக வந்து அரசு புரிந்தபோது திருமால் மதுரையை விரும்பி மச்ச வடிவாக வந்தனர் என்று புகழ்ந்து கூறும்படியிருந்தது மீனக்கொடி என்பது கருத்து. வடமதுரையிற் குடியேறு முன்னே தென் மதுரையை விரும்பி மச்ச வடிவாய்ச் சுந்தரர் கை யமர்ந் திருந்தனர் என்று கூறும்படியிருந்தது அக்காட்சி. அதற்கு இயைபாகப் பாகவதம் 8 ஆம் கந்தத்தில் ஒரு கதையும் உண்டு. சத்திய விரதன் என்ற பாண்டியன் வையையாற்றிற் கடவுள் வழிபாட்டிற்காக அருக்கியங் கொடுக்க (நீர்

தெளிக்க) நீரினைக் கையில் அள்ளியபோது திருமால் அந் நீரில் மீன் வடிவமாக வந்தனர் என்பது அது. மச்சாவதார முரைத்த அத்தியாயத்தில் இதன் விரிவு காண்க. பாண்டி யர்க்கு மீனக்கொடி வந்ததும் இது பற்றிப்போலும்.

'சண்டமுகி லுருமனைய சராசந்தன் றனக்கஞ்சி, வண்டு வரைமரனுக வடமதுரை கைவிட்ட, திண்டிறன் மாதவன' என்றார் வில்லியும். இது வடமதுரையில் சிலகாலம் அரசு புரிந்தனன் இருட்டிணன் என்பதை விளக்கியது. சத்தி - உமை. புரத்து ஓர் பால்-உடம்பின் ஒரு கூற்றில், வலப் பாகத்தில், தழைத்து-பெருகி; விளங்கி. சிவன் முத்திபுரம்- மதுரை, மதுரையிற் பிறந்தவர் யாவரும் முத்தி பெறுவர். பிறந்தார்க்கு முத்தி தரும் பெருமையமைந்தது எனபது பொருள். இறக்க முத்தி தருவது காசி எனபதுபோல இது பிறக்க முத்தி தருவது எனக் கொள்க.

முளைத்தெழுந்தோர், மூல லிங்கமாக முதலில் முளைத் தார் மதுரையில் என்பது அத் தலச் சிறப்பு. "முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" என்ற திருவாலவாய்த் தேவாரப் பதிகமும் இதனை வலியுறுத்தும். அத்திசைபோல் எட்டுத்திசையிலிருப்பது போல்; எட்டு யானைகள் சுமந்த விமானம், இந்திரன் மயன் என்ற தெய்வத் தச்சனால் எட்டு யானைகள் சுமந்து நிற்க விமானம் அமைத்துப் புவியில் நிறுத்தி முதலில் வழிபட்டு வந்தான் என்பதும், பினனர் ஒரு பாண்டியன் அவ் விமானம் அமைந்த இடத்திலேயே திருக்கோயில் சமைத்து வழிபடப் பாண்டிய மனனர் வழி வழியாக வணங்கி வந்தனர் என்பதும் வரலாறு.

"மதமலை யிருநான்கு பிடர்சுமந் தேங்கிச், செம்பொன் மணி குயிற்றிய சிகரக் கோயிலுள், அமையாத் தண்ணளி யுமையுட னிறைந்த ஆலவா யுறைதரு மூல காரணன்" என்பது கல்லாடம், "எட்டானை பூண்டெழுந்த இந்திர விமானத்து" என்பது சொக்கநாத ருலா. "விரியெட்டுத் திசைபரப்ப மானிருமித் துதவியவவ் விமானஞ் சாதி யரியெட்டுத் திருவுருவப் பரஞ்சுடரை யருச்சிப்பா னுயினுனே"

என்பது திருவிளையாடல். அழகான இடமும் இது; கோயிலும் இது; நாம் வழிபடுவதற்குத் தக்கது என்று இந்திரன் வந்து முந்தி வணங்கிய கடம்பவனம் என்ற கருத்துத் தோன்ற இடம்பவனம் ஈது...கடம்பவனம் என்றார். காந்தர் காந்தியுடையார் என்று கொள்க. அல்லது காந்தம்போலக் கவரும் இயல்புடையார் என்று கொள்க. அலகு - அம்பின் வாய். அம்பாய்க் கையின்கண்ணிருந்த அரிக்கும் அறிதற்கு அரியவர் எனச் சிறப்பும்மையாகக் கொள்க. முடி: அரசர் தலையிற் கவிக்கப்படுவது. கிரீடம் என்பதும் அது. பரிக்கும்- தாங்கும். காப்பாற்றும் முறையுள்ளார்- அரசுரிமையுடையவர் என்க. இத்தகைய பெருமையுடைய இறைவர் சொக்கநாதர் என்பது.

**139 - 150 :** பல நாளும்............வாழ்த்தாமே மெய்தான்

(பொ - ரை.) திருநின்றவூரில் வாழ்ந்த பூசலார் என்பவர் நீண்ட இரவெல்லாம் பலநாளாக நினைந்து மலைபோலச் சமைத்த உள்ளத்து ளெழுந்த கோயிலும், நன்மை தருந் தாமான கங்கையைத் தரித்துள்ள சடைமுடி குளிரும்படி கண்ணப்பர் வாயால் உமிழ்ந்த சிறந்த நீராட்டு நீரும், தூய்மையான மழை பெய்ததால் துன்பமிகுந்த திருக்குறிப்புத் தொண்டர் துணிகளைத் தோய்க்கும் நீர்த்துறையில் மன வலிமையோடு தந்த உடையும், இன்பமாக நீங்குதற்கரிய வன்புடைய மானக்கஞ்சாறனர் சாத்திய அழகிய மயிர்முடி சுற்றிய பஞ்சவடியும், அழகிய விடையூர்தியுடையவராம் அவர் மன்மதனிடத்து முன்னர்ச்சினந்து சிவந்த கண்போல மூர்த்தியார் தாம் அன்பினால் முழங்கையைத் தேய்த்துச் சேர்த்துத் தந்த சிவந்த சந்தனமும், அரசனைப்போல உலக மனைத்தையும் காக்குந் திருமால் சாத்திய கண்ணாகிய மலரும், சாக்கியர் தாம் அன்போடு சாத்திய அழகிய கல்லாகிய குளிர்ந்த மலரும், உண்ணுதற்குத் தக்க உணவாக ஆக்கி மாறன் விருந்தளித்த உணவும், சிறுத் தொண்டர் தந்த பெருமையான பிள்ளைக்கறியமுதும், அரிவாட்டாயர் தந்த மாவடு என்ற உணவும், நீக்கமுடியாத கருமை நிறைந்த இரவிற் கணம்புல்லர் தமது முடிமேல் ஏற்றிய சிவந்த விளக்

கும், ஆகிய இவ் வரும்பொருள்களைப் படைத்து வணங்கத் தகுந்த சிவபெருமானுக்குப் பூசைப் பொருள் படைத்து யாரால் வணங்கக்கூடும்? கூடாதன்றோ. உமை நாயகராகிய அவர் ஆரூரர்க்குப் பண்டைக் காலத்தில் எனக்கு நீ பாடும் பாட்டே அர்ச்சனையாம். ஆதலால் தமிழ்ச் சொற்களாற் பாடல் பாடுக என்று பணித்தமையால் அவர் சொற்படியே நீ செய்தாய். நான்கு வேதங்களும் திகைத்து மறைந் தொதுங்குமாறு பித்தனென்று வைதாய்; நீ வைதாலும் அஃது அவர்க்கு வாழ்த்தாகும போலும். இஃது உண்மை தான் என்று அறிந்தேம்.

(வி - ம்.) திருநின்றவூரில் பூசலார் என்னும் அடியார் கோயில் சமைத்து வழிபட எண்ணிப் பொருளின்மையால் உள்ளத்திற் கோயிலமைத்து வழிபட்டார் என்பது. இரவு எல்லாம்: பகற்காலமன்றியும் இரவிலும் நினைந்தார் என்பது. ஒவ்வொரு நாளும் இன்றைக்கு இன்னது செய்தோம்; நாளை யின்னது செய்வோம்; செய்தோம் என்றென்றே எண்ணி முடித்தார்; அதுதான் அவர் அமைத்த கோயில். "குன்று போலே" என்றது அவர் எண்ணிய எண்ணத்தையே எனக் கொள்க. "கங்கை முடிதான் குளிர" என்றது, கண்ணப்பர் வாயாலுமிழ்ந்த மஞ்சன நீர் கங்கையாற்றினல் என்றும் குளிர்ந்துள்ள முடியை அதனினும் மிகுதியாகக் குளிர்வித் தது என்ற கருத்தினை விளக்கியது. அன்பால் அந்நீர் சிறந் தது. "ஒரு முனிவன் செவியுமிழு முயர்கங்கை முதற்றீர்த் தப், பொருபுனலி னெனக்கவன்றன் வாயுமிழும் புனல்புனி, தம்" என்று சிவகோசரியார் கனவிற் சிவபெருமான் கூறி யது காண்க. மஞ்சனம் - நீராட்டும். புனல். திரு - அடை மொழி. திருக்குறிப்புத் தொண்டர் சிவனடியார் என வந்தவர்க்கெல்லாம் உடை துவைத்துத் தூய்மையாக்கிக் கொடுக்குந் தொண்டு பூண்டவர், ஒரு நாள் சிவபெருமானே அடியவராக வந்து உடையைத் தந்து மழையைப் பொழி வித்துத் துன்புறுத்திக் கற்பாறையில் தலையை மோதும் போது வந்து கைகளாற் பிடித்துத் திருவுருக்காட்டி னின்றார் என்பது. பரிவட்டம் - தெய்வங்கட்குச் சாத்தும் உடை.

இன்பு ஆ - இன்பமாக; சாத்தும் என்பதனோடு கூட்டுக. தணிவு அரிய-நீங்குதற்கு அரிய, நீங்காத அன்பு என வருவித்து முன்னர்க் கூட்டுக. அன்பு நீங்காத மானக்கஞ்சாறர் எனக. மணிமுடி - அழகிய மயிர்முடி. பஞ்சவடி - அடியார்கள் சடைமுடியுடன் தொங்கவிடுவதுபோலும். மூர்த்தியார் முழங்கையைச் சந்தனக் கட்டையாகக் கல்லிற் றேய்க்கக் குருதியே சந்தனமாயிற்று. அதனை விளக்க விடையார் சேர்ந்த கண்போல என்றார். பூமன் - மன்னன். மன்னன் ஒருவன் தன்னாடு காத்ததுபோல உலகங்காக்கும் அரி என உவமை விளக்கம் கொள்க. சாக்கியர் கல்லை மலராக எறிந்து வழிபட்டனர் என்பது. போக்கியமா - உண்ணும் உணவாக. மாறன்: இளையான்குடி மாறன். மாக்கறி - பெருமை தங்கிய கறி. ஒருவராலும் சமைத்துக் கொடுக்கப்படாத அருமையான கறி அது; பிள்ளைக்கறியமுது. தாயர் : அரிவாள்+தாயர்=அரிவாட்டாயர் - அரிவாளையுடைய தாயர் அரிவாட்டாயர் என வந்தது போலும். மாவடு — மாவின் பிஞ்சுக்காய்; அதனைக் கூட்டுச் சேர்த்த கறி. கணம் புல்லர் என்பவர் திருக்கோயிலுக்கு விளக்கிடும் தொண்டு புரிந்தவர். பொருளின்றி வறுமை வந்ததால் விளக்கேற்ற வகையின்றிப் புல்லெடுத்து விற்று அப் பொருளால் விளக்கேற்றினர் புல்லும் ஒருநாள் விற்கப்படாமையால் அப் புல்லினையே தலையில் வைத்து விளக்கேற்றினர்: தலை முடியும் வெந்தது. அப்போது சிவபெருமான் காட்சி தந்தார் என்பது. பூசலார் முதல் கணம்புல்லர் இறுதியாக ஈண்டுக் கூறிய நாயனர் வரலாற்றின் விரிவு பெரியபுராணத்துட் காண்க. கோயிலும், மஞ்சனமும், பரிவட்டமும், பஞ்சவடியும், சந்தனமும், கண் மலரும், தண்மலரும், அமுதும்; மாக்கறியும், மாவடுவும், தீபமும் அமைத்து, அத்தகைய நாயன்மார்களால் வணங்கலுறும் அங்கணர்க்கு யாரால் பூசை சமைத்து வணங்கத் தகும்; ஒருவராலும், அவர்களைப்போலப் பூசைப் பொருள் காட்டி வழிபடல் இயலாது என்ற கருத்துக் கொள்க. அங்கணர் - சிவபெருமான். பூசை - பூசைக்குரிய பொருள்களை யுணர்த்தியது. யாரால் வணங்கத் தகுமோ எனக் கூட்டுக. தகுமோ - ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது.

யாராலும் என உம்மைகூட்டி யாவராலும் வணங்கத் தகாது எனக் கொள்க. ஆரூரர்க்கு ஆதியில் அர்ச்சனை பாட்டேயாகும் என்றார்; சொற்றமிழ் பாடுக எனவும் சொன்னார் என்று பொருத்துக. ஆரூரர் - சுந்தரமூர்த்தி நாயனார். "மற்றுநீ வன்மை பேசி வன்றொண்ட னென்னும் நாமம் பெற்றனை நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க, வற்சனை பாட்டே யாகு மாதலான் மண்மே னம்மைச், சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்" எனவும், "அன்பனை யருளி னோக்கி யங்கண ரருளிச் செய்வார், முன்பெனைப் பித்த னென்றே மொழிந்தனை யாத லாலே, யென்பெயர் பித்த னென்றே பாடுவா யென்றார் நின்ற, வன்பெருந் தொண்ட ராண்ட வள்ளலைப் பாட லுற்றார்" எனவும் (தடுத்தாட்கொண்ட-70-73) வருவன காண்க. தமிழே! நீ சிவபெருமானைப் பித்தனென்று வைதது கண்டு நான்கு வேதங்களும் இனி நாம் துதித்துப் புகழ்ந்து சிவபெருமானைப் பாடினும் பயனின்று எனக் கருதி உன் சிறப்புக் கண்டு மனந்திகைத்து ஒதுங்கி மறைந்தன; வடமொழி வேதங்களும் வழக்கொழிந்தன என்ற கருத்துத் தோனற "நால் வேதந் திகைத் தொதுங்க" என்றாள். பித்தனென்று வைதாய் நீ, அதுவும் அவர்க்கு வாழ்த்தாயிற்று. உன் பெருமை என்ன சொல்வேன் என்க. இஃது உண்மையே, வரலாற்றிலுள்ளபடி என விளக்கியதாம்.

### 151 - 160 : இருந்தமிழே................இரங்காயோ

(பொ - ரை.) பெருமை பெற்ற தமிழ்மொழியே! நீ எனக்குத் துணையாயிருப்பதனால் நான் இதுவரை உயிரோடிருந்தேன், இல்லையெனில் மாய்ந்திருப்பேன், தேவர்கள் உண்ணும் உணவாகிய புதிய அமுதத்தைத் தந்தாலும் அதனையும் விரும்பேன். காம மயக்கத்தால் வருந்தினேன். போர்வெல்லும் யானையுண்ட விளங்கனி போன்றேன். காமமாகிய மலையையொத்த யானை தின்ற கரும்புபோலவும் ஆயினேன். நல்ல அவரைக் கொடிபடர்ந்த யாவரும் தேடு நிழலில் இருப்பவர் மனம்போல வாடினேன். கொடிய பனியால் வாடிய செந்தாமரை மலரைப் போன்றேன்.

ஓடத்தின் மேலேறிக் கொள்ளம்பூதூரில் வெள்ளப் பெருக்கைக் கடந்து சென்றாய் நீ, எனது கர்மவெள்ளத்தினின்றும் என்னைக் கடத்திவிடவேண்டுமன்றோ? நீ போ என்று மாறுபட்ட சமணர்களை வலியக் கழுவேறும்படி செய்தாய், என்னைச் சினந்து வரும் காமனையும் கழுவேற்ற மாட்டாயோ? செய்வை. திருநீற்றைப் பூசியே ஆங்குப் பாண்டியனது அருமையான முதுகின் வளைவைத் தொலைத்தாய் முற்காலத்தில்; இந்நாள் மன்மதன் வளைத்த செய்ய கரும்பு வில்லின் வளைவை நீக்கமாட்டாயோ? அப் பாண்டியனுக்கு உடம்பில் உற்ற வெப்பு நோயை நீக்கினை, இந்நாள் என் கொடிய காமத்தால் உண்டாகிய வெப்பு நோயை நீக்கக் கருதாயோ? நீ செய்தால் இவையெல்லாம் பிழையல்ல. சமணர் தந்த நஞ்சினை யமுதாக்கினை, இன்று எனக்கு ஆக்கிப் படைக்கும் நஞ்சினை யமுதமாகச் செய்ய மாட்டாயோ? ஒருவாலும் நீக்கமுடியாத கொடிய தீயினுட் கிடந்தும் வெந்து போகாமல் உய்ந்திருந்தனையென்று சொல்வார் அறிஞர். என்னைக் காமமாகிய கொடிய தீமானது சுடாதிருக்குமாறு செய்யமாட்டாயோ? கொங்கு நாட்டில் வந்து அந்தப் பனியால் வாடாமல் அங்குள்ளவர் துன்பத்தினை நீக்கினை, இப் பனியால் நான் வாடாமற் செய்ய நீ மனமிரங்க மாட்டாயோ?

(வி - ம்.) தமிழே நீ அமிழ்தினும் இனியாய்! ஆதலால் அமிழ்தும் வேண்டேன் என்றதாயிற்று. ஆனையைத் தின்ற விளங்கனி என மாற்றி விளங்கனி நோயால் தின்னப்பட்ட யானை என்க. தேரை குடித்த இளநீர் என்பதுபோல. விளங்கனி என்பதொரு நோய். கல் - மலை, கல்லானை - மலை போன்ற யானை என உவமைத் தொகையாக்குக விரகமாகிய யானைக்கு நான் ஒரு கரும்பாகினேன் என்றாள். கரும்பினைக் கடித்துச் சாறு குடித்துச் சக்கையாக்குவது போலக் காமம் என் குருதியைக் குடித்து வெற்றுடலாக்கியது, உயிரை யோட்டியது என விளக்கம் கொள்க. நல் அவரை நிழல், தேடு நிழல் எனவும் நிழலிலிருந்தார் சிந்தனைபோல் எனவும் பொருள் கொள்க. "அவரை நிழலில் இருப்பவர்களின்

அறிவு தேயும்'' என்பது ஆயுள் நூற்றுணிபு. "உனை விட்டு மற்றொருன், றெண்ணுதவரை நிழற்பாற் பயினினு மென்மனமே'' (திருக்குடந்தைத் திரிபந்தாதி, 70) வடமொழி நைஷத நூலாசிரியர் சரிதத்தாலும் இது விளங்கும்'' என்பது டாக்டர். உ.வே.சா. அவர்கள் குறிப்பு. நல்லவரைத் தேடு நிழற் சிந்தனையில் தேம்பினேன் - நல்லாசிரியரைத் தேடியலையும் குளிர்ந்த உள்ளம்போல வாடினேன் என்று பொருள் கொள்ளலுமாம். பக்குவ நிலையுடைய உள்ளத்தார் ஞானம் கற்பிக்கும் ஆசிரியரைத் தேடி வாடுவர் என்பது ஞான நூற்கொள்கை. பொருந்தியது கொள்க. செந்தாமரை மலர் பனியால் வாடும் என்பது மரபு. "தாமரை முகங்கள் வாட்டுந் தண்பனிக்காலம்'' என்பது நைடதம். வெள்ளக் கொள்ளை - வெள்ளத்தின் பெருக்கு, மிகுதி. மால் வெள்ளம் - காதலாகிய வெள்ளம். திருஞானசம்பந்தர் திருக்கொள்ளம்பூதூர்க்குச் செல்லும் வழியில் வெள்ளம் பெருகி யாற்றில் வந்தது கண்டு,

"கொட்ட மேகம ழுங்கொள்ளம் பூதூர்,
நட்ட மேவிய நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ,
நல்கு மாறரு ணம்பனே''

என்ற பதிகம் பாடி ஓடத்தை நடத்திச் சென்றார் என்பது வரலாறு. வேண்டாவோ, இதில் ஓகாரம் எதிர்மறை. பின் வந்த ஓகாரங்களும் அப் பொருளன. மாறு இட்ட - பகை கொண்ட. சாக்கியர் - சமணர். இச் சொல் பௌத்தரை யுணர்த்தும் இடமும் உண்டு. "காட்டு மாவ துரித்துரி போர்த்துடல், நாட்ட மூன்றுடை யாயுரை செய்வனன், வேட்டு வேள்விசெய் யாவமண்கையரை, யோட்டி வாது செய் யத்திரு வுள்ளமே'' என்ற பதிகம் பாடிய பின்னர்க் கழுவேறினர் சமணராதலின் வன்கழுவேறச் செய்தாய் என்றார். தமிழ்தான் கழுவேறச் செய்தது என்பது கருத்து. சீறு+இட்ட=சீறிட்ட. சீறு என்ற பகுதி இடு என்ற துணை யுடன் கூடி, சீறிட்ட என நின்று அகர விகுதி பெற்றதாகக் கொள்க. சீறிய - சினந்த என்பது பொருள். வேள் - காமன்,

அது: கழுவேற்றியது. கழுவேற்றுவிப்பாய் என்ருள். அங்கு+அரும்+பின்=அங்கரும்பின் - அங்கு அருமையான முதுகிலுள்ள. வழுதிக்கு - பாண்டியனுக்கு. ''மந்திரமாவது நீறு'' என்ற திருநீற்றுப் பதிகம் பாடியபின் வெப்பு நோயும் கூனும் ஒழிந்து நெடுமாறன் ஆயின செய்தியை விளக்கியது. வெவ்விரகம் - கொடிய காமம். சமணரூட்டிய நஞ்சினைத் திருநாவுக்கரையர் உண்டு உயிர் பெற்ருர் என்பது. இதற்குரிய பதிகப்பாடல் தேவாரத்துள் இல்லை; பாடியிருப்பர், அஃது அழிவுபட்டிருக்கும் போலும். ஆக்கிய - சமைத்த நஞ்சு என்ற உணவினை. உணவை நஞ்சாக வெறுப்பது காதலர் செயல். தீக்குள்ளே கிடந்தும் வேவாய் என்பது சம்பந்தர்க்கும் சமணர்கட்கும் சொற்போர் நிகழ்ந்தபின் ''தளிரிளவள ரொளி'' என்ற தமிழ் பாடித் தீயிலிட அவ்வேடு வேவாது நின்றமை குறித்தது. கொங்கில் வந்து என மாற்றுக. கொங்கு - கொங்குநாடு. கொங்கு நாட்டிலுள்ள திருச்செங் கோட்டில் 'அவ்வினைக் கிவ்வினை' என்ற பதிகம் பாடி யடியார்கள் பனியால் வாடிய நோயை யொழித்த செய்தியைச் சுட்டியது; ''யார்க்குந் துயரொழித்தாய்'' என்பது. இப் பனியால் நான் வாடாது நலமுறச்செய்ய மனமிரங்காயோ எனச் சொற்கள் வருவித்துக் கொள்க. செய்யாயோ விரும்பாயோ என்ற எதிர்மறைவினை முற்றுக்களை உடன் பாடாக்கிச் செய்வாய் விரும்புவாய் எனப் பொருள் கொள்க.

## 160 - 166: அப்பரை..................ஆக்காயோ

(பொ-ரை.) திருநாவுக்கரசரைக் கரிய கடல் கொல்லாதவாறு வலிய கற்றாணுடன் மிதக்குமாறு செய்தாய், அவ்வாறு செய்த நீ என்னையும் அக் கடல் கொல்லாமல் எனக்கு உறவாக்க மாட்டாயோ? மிகவும் உயர்ந்த மன்றத்திலுள்ள பனையின் வடிவத்தை மாற்றினை நீ. அப் பனைமேல் உள்ள அன்றிற் பறவையை வேறொரு பறவை யாக்காயோ? பழைமையாகத் தெற்கின்கண்ணுள்ள பொதியமலைச் சந்தனத்துடனும் தென்றற் காற்றுடனும் நட்புக்கொண்டு வந்தாய், அம் மலைச் சந்தனத்தையும் தென்றலையும் என்னுடன்

அன்புற்றிருக்க நண்பாக்க மாட்டாயோ? உன் முன்னிருந்து பாடும் இசையெல்லாம் உனக்குரிய பெண்களாகச் செய்து சேர்த்தாய். அவை என்னோடு பகைகொள்ளாதிருக்குமாறு சொல்லாயோ? நீ பாடலாற் சின்னம், காளம், பல்லக்கு, பந்தர் இவை முத்தினால் அமைந்தனவாகப் பெற்றாய், பொன் போன்றாய்! அம் முத்துக்கள் என்னைச் சுடாமல் நான் அணியுமாறு முத்துமாலைகளைப் பூட்டாயோ? முற் காலத்தில் இறந்த பெண்ணாகிய பூம்பாவையின் எலும்பைப் பெண்ணாக்கினை நீ, எலும்பாய் மெலிந்த என்னுடம்பையும் அழகிய பாவைபோன்ற நல்வடிவம் ஆக்கமாட்டாயோ?

(வி - ம்.) வன்கல் - வலிய கற்றூணில், மை - கருமை நிறம். நாவுக்கரசரைச் சமணர்கள் கற்றூணுடன் சேர்த்துக் கட்டிக் கடலிற்போட அவர் "சொற்றுணை வேதியன்" என்ற நமச்சிவாயப் பதிகம் பாடி ஓடம் போற் கற்றூண் மிதப்ப வந்து கரையேறிய செய்தி குறித்தது. கடல் பகையா யெனைக்கொல்ல வருகிறது. அதனை உறவாக்குவை என்றாள். மன்று + இல்: மன்றில்-மன்றத்தில் திருவோத்தூரில்ஆண் பனையைப் பெண்பனையாக்கிய செய்தியைக் குறித்துப் பனை வடிவ மாற்றினாய் என்றாள். அன்றில் எனக்குப் பகை ஆதலின் அதனை வேறு பறவையாக்கின் எனக்கு நலம் என்பது. தமிழ் பொதிய மலையிற் பிறந்தது என்ற கருத்தினை யுட்கொண்டு சந்தனமும் தென்றலும் உனக்கு உற வென்றாள். எனக்குப் பகை யவை இந்நாளில் உறவாக்குவாய் இவற்றை. இசையெல்லாம் உன்னுரிமைப் பெண்கள். அவ் விசை எனக்குப் பகை. என்னை வெறுக்காமல் இசைகள் உற வாகச் செய். சின்னம் - ஊது கொம்பு. காளம் என்பது ஒருவகைச் சின்னம். சிவிகை - பல்லக்கு - ஞானசம்பந்தர் திருநெல்வாயி லரத்துறையிலும், திருபபட்டீச்சரத்திலும் முத்துச் சின்ன முதலியவை பெற்றனர் என்பது வரலாறு. அவை என வருவித்து, சுடாது அணிய அவை பூட்டாயோ எனக் கொள்க. முத்துக்கள் சுடுகின்றன; அவை சுடாமற் குளிருமாறு செய்து அம் முத்து மாலையை நீ பூட்டுவாய். என்னுடலும் வற்றி யெலும்பாயிற்று; ஆதலால் அவ்

வெலும்புகளைத் திருத்திப் பெண்ணாகச் செய் என்பது கருத்து. பூம்பாவை - அழகிய பெண். பாவை உவமையாகு பெயராய்ப் பெண்ணினை யுணர்த்தியது. காதல் கொண்ட காரிகையார்க்கு இன்பம் விளைக்கும் பொருள்கள் எல்லாம் துன்பம் விளைக்கும் என்பது இலக்கிய நூல் மரபு. இயற்கையும் அது பனி, கடல், அன்றில், சந்தனம், தென்றல், இசை, முத்து, இவை போன்ற குளிர்ந்த பொருள்கள் பகையாம்.

"முத்துங் களபமுந் தண்பனி நீரு முயங்குமலர்த்
தொத்துங் குளிரியுந் தூய்மலர்ப் பாயலுஞ் சூழ்ந்து புறங்
கத்துங் கடலுங் கதலியு மாலியுங் கங்குலுமிப்
பத்தும் பெரும்பகை யாய்விட்ட வாமொரு
பைந்தொடிக்கே"
(இரத்தினச் சுருக்கம்.)

எனப் பகைப் பொருள் கூறியிருப்பன காண்க.

## 166 - 169 : மங்கத்தான்.........பிறிதுண்டோ

(பொ - ரை.) தோன்றாமல் மறைய இறந்துபோயினும் பெரியமுதலை வாயினின்று பின் அக்குழந்தையை வருமாறு படைத்தாய் நீ, ஆதலால் நான் இறந்தாலும் பின்னர்ப் படைக்கவும் வல்லாய், பொருந்திய சொற்களையே புகன்றாள் இவள் என்று மதித்து என் சொற்களைச் செவியேற்றுச் செல்வாய். மீண்டுவராமல் அங்கிருக்க நினையாதே. பொய் நீங்க (உண்மையாக) ஒளி நிறைந்த சொக்கர்பால் சென்று தங்கியிருந்து ஆங்கு அவரை மனம் இயையுமாறு செய்து இனிமையாகப் பேசிவருந் தூது வேறு உளதோ? இல்லை.

(வி - ம்.) திருப்புக்கொளியூர் அவிநாசியிற் சுந்தரர் சென்றபோது முதலை மூன்றாண்டுகட்கு முன்னர் விழுங்கிடதை நினைந்து வருந்திய பெற்றோர்க்கிரங்கி, "எற்றான் மறக்கேனெழுமைக்குமெம் பெருமானையே" என்ற பதிகம் பாடி நான்காவது பாடலில்,

"புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே,
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே"

என்று பாடியபோது அப் பிள்ளை கரையில் வந்து மூன்றாண்டும் நிரம்பிய வடிவுடன் நின்றது என்பது வரலாறு. 'தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை, யுண்ட பாலனை யழைத்ததும்" என்பதும், "கான்றாண்டு வெம்முதலை கவ்வியுண்ட பிள்ளைதனை மூன்றாண்டு சென்றழைத்த மூதூரும்" என்பதும் இதனை விளக்குவது காண்க. தேசு+ இவரும் = தேசிவரும் - ஒளிமேலோங்கிய. சொக்கருக்கு : வேற்றுமை மயக்கம். ஏழனுருபு கொள்க. அவரை என்பதற்கும் ஏழனுருபு கொள்க. நீயே தூதுக்குத் தகுதியுடையாய் என்பதை விளக்கியது இது.

## 169 - 177 : நேசமொடு..........தோன்றுண்டோ

(பொ - ரை.) அன்புடனே மனத்தாற் றடவினும் ஒருவரானும் காட்டத்தகாதவராகிய சிவபெருமானைக் கைவிரலாற் சுட்டித் தந்தையார்க்குக் காட்டிய பிள்ளையாரும், தெய்வத் தன்மையுடைய வெள்ளிமலையில் வீற்றிருக்கும் பரமனைக் கண்டு போற்ற முயன்று அப் பரமனைத் திருவையாற்றில் ஆதரவாகக் கண்டு போற்றிய அரசரும், சிவபெருமான் அளந்து தந்த செம்பொன்னை மணிமுத்தாற்றிற் போட்டுத் திருவாரூர்க்குளத்திலே தேடியெடுத்த தலைவராகிய சுந்தரரும், வளம் விளங்கிய திருக்காளத்தியில் வந்த காட்சி கயிலாயத்துக் காட்சியை நிகர்த்தது என நீட்டமாகக் கண்டு பாடியவராகிய நக்கீரரும் ஆகிய இவர்கள் எல்லாரும் நீயே யன்றோ? அப்பாலும் கேள், தமக்குத் தாயில்லாதவராகிய கடவுளும் தாமாகவே ஒரு பெண்ணின்பால் வந்திருந்தவரும் ஆகிய ஈசனார் 'அம்மையே' என்று தம் வாக்கால் அழைத்த காரைக்காலம்மையாரும் ஆகித், தமக்கு எதிராக வெள்ளிய விடையை யூர்தியாக மேற்கொண்ட தலைவராகிய சிவபெருமான் வரவிடுத்த வெள்ளை யானையின் மேலேறிச் சென்ற அறிஞரும் ஆகி, வண்ணானையும் தள்ளாமல் மிஞ்சிய

உவர்மண்ணால் வெண்ணீறு பூசிய அடியவரென்று வணங்கிக் கைகுவித்துத் தொண்டு செய்த அடியவராகிய சேரமான் பெருமாளும் ஆகி, யெங்குஞ் சஞ்சரித்துத் தென் கைலாய மலைச்செல்வரிடத்துஞ் சென்றாயே, உன் செயலால் முடியாதது ஒன்றுண்டோ? இல்லை; ஆதலால் நீ **செல்வாய்.**

(வி - ம்.) தைவரினும் - தடவினும், காட்டத் தகா தார் - பிறருக்குக் காட்டத் தகாதவர். ஒருவன் அன்போடு மனத்தால் தடவிக் காணினும் அயலார்க்குக் காட்டத் தகாதவர் என்பது கருத்து. மூன்றாண்டுப் பருவத்தில் தந்தையாருடன் சென்று பொய்கைக்கரையில் நின்றழுத போது அம்மையும் அப்பனுமாக வந்து ஞானப்பா லூட்டிக் காட்சி தந்த வடிவத்தைத் தந்தையார் "பால் கொடுத்தது யார்?" என்று வினவியபோது கைவிரலாற் சுட்டிக் காட்டி யவர் ஞானசம்பந்தர். ஆதலின் "காட்டியருள் காளை" என்றார். அவ்வமயம் பாடியதுதான் "தோடுடைய செவியன்" என்ற பதிகம். பூதரம் - மலை. வானவர் - தேவர். வெள்ளிமலையில் உள்ள என்ற அடைமொழி சிவபெருமானைக் குறிப்பா லுணர்த்தியது. கயிலைமலைக் கடவுட் காட்சி காண முயன்றவர் நாவுக்கரசர். அவருக்குத் திருவையாற்றிற் காட்சி கிடைத்தது. "மாதர்ப் பிறைக் கண்ணியானை" எனத் தொடங்கிய பாடலில் "யாதுஞ் சுவடுபடாம லையாறடைகின்ற போது, காதன் மடப்பிடி யோடும் களிறு வருவன கண்டேன், கண்டே னவர் திருப் பாதங் கண்டறி யாதன கண்டேன்" எனக் காட்சியை வியந்தது காண்க. தேடியருள் கோவும் என்றது சுந்தரரைக் குறித்தது; அவர் முதுகுன்றம் மணிமுத்தா நதியிற் போட்ட பொற் கட்டிகளைத் திருவாரூர்க் குளத்துள் தேடிக் கண் டெடுத்தவராதலின். அவ்வமயம் பாடிய பதிகப் பாடல் "பொன் செய்த மேனியினீர்" என்பது. சொற்றவனும் என்றது நக்கீரரை யுணர்த்தியது. நக்கீரர் கயிலை காணச் சென்று சீகாளத்தியிற் கயிலைத்திருவுருக்காட்சி கண்டு அது குறித்து, "கயிலை பாதி காளத்தி பாதி" என்ற அந்தாதி

பாடியவர் அவராதலின், அப்பால் கேள் என மாற்றி, காளையும், அரசரும், ஜோவும், சொற்றவனும் நீயாகவே யிருந்தது மட்டுமன்று, இன்னும் பல வடியா ருருவாகவும் இருந்தாய், அதனையுங் கூறுவேன் கேள் என்றதாகக் கொள்க. 'அம்மை தமக் கில்லாதார்' என்றது பிறப்பிறப் பில்லாப் பெருமான் என்றதை யுணர்த்தியது. அம்மை தாமா விருந்தார் என்றது, சிராப்பள்ளியில் ஓர் ஏழை மகள் மகப்பேறு காண வந்த அன்னையானவள் காவிரியாற்று வெள்ளத்தால் தடைபட்டு நிற்க, அவள் வடிவாகச் சிவபெருமான் வந்து மகப்பேற்றுக் குதவி புரிந்து பின் மறைந்து தாயுமானவர் என்று பெயர் பெற்ற வரலாற்றினை யுட்கொண்டது. உரைத்த அம்மை: காரைக்காலம்மை யார். உரைக்கப்பட்ட; அழைக்கப்பட்ட எனச் செயப் பாட்டு வினையாகக் கொள்க. அம்மை அம்மையென அடுக்கிய சொல்லழகு சொற்சுவை காண்க வேந்தர் - மன்னர், அரசர். இஃது உலகுக்கெல்லாம் மன்னராகிய - இறைவ ராகிய சிவபெருமானை யுணர்த்தியது, "வெள்ளானை மேற் கொண்ட" என்ற அடைமொழியால். வெள் + ஆன் + ஐ = வெள்ளானை-வெள்ளை விடையை. மேல் என்பது ஆகுபெய ராய் ஊர்தியை யுணர்த்தியது. ஆனை ஊர்தியாகக் கொண்ட எனக் கொள்க. அல்லது ஐ சாரியையென விடுக்க. வித்தகர் சுந்தரமூர்த்தியாவர்: வெள்ளை யானை மேலேறிக் கயிலை சென்றவர் அவராதலின். வித்தகர் - அறிஞர், புலவர். விஞ்சு + உவரால் = விஞ்சுவரால் - மிகுந்த உவர் மண்ணுடலில் வழிந்திருந்த தோற்றத்தால் என விரிக்க. வண்ணானை...ஆட் செய்த அன்பர் - கழறிற்றறி வார் என்ற சேரமான் பெருமாணுயனார். ஆள் செய்த - தொண்டு புரிந்த. அடியார் கோலத்தைக் கண்டு சிவனாகக் கொண்டு வணங்குவதே அவர்க்குரிய தொண்டாதலின் ஆட்செய்ததாயிற்று. சஞ்சரியா - செய்யா என்ற வாய் பாட்டெச்சம்; சஞ்சரித்து என்க. உன்கையில்-உன்செயலால். கை-செயல். எல்லாம் உன்னாற் செய்யவியலும் ஆதலால் தூது செல் என்பது கருத்து.

**177 - 183: என்கையால்..........வேண்டுமோ**

(பொ - ரை.) என்று பலரும் கூறுவதால் அன்னையாகிய உமையும் அவள் பாகத்தமர்ந்த அன்பராகிய சிவபெருமானும் உக்கிர குமார பாண்டியன் என்ற முருகக் கடவுளும் வந்து அரசுபுரிந்த தென்மதுரைக்கு இனிமையான திருத்தமான வழியே செல்லுக. நீ செல்லும் வழி நல்வழியாக இருக்கவேண்டும், அஃது எவ்வழியென்று நீ வினவில் சொல்வேன் கேள்; எவ்வழியாகச் சென்றாலும் வெற்றி பெற்று மீள்வாய், உன்னை நினைந்து "வேயுறு தோளி" என்ற பாடல் பாடிச் செல்பவர் காரியங்களெல்லாம் முற்றுப் பெறுமே! செல்வாய், இடையூறு நேருமோ? திருவையாற்றில் காவிரி வெள்ளந்தடுத்தும் அதனை விலக்கி நீ சென்ற செயல் நான் அறியாததோ? அன்றியும் ஓரிடத்திலே பாலைவனத்தை நெய்தனிலமாகச் செய்தனை, இன்னும் அப் பாலைவனத்தைப் பூஞ்சோலையாகச் செய்யவும் கூடும். உனக்கு நான் என்ன வழி சொல்வேன்? எல்லார்க்கு மேலானவராகிய சிவபெருமான் யாவரும் வியந்து சொல்லும்படி கட்டுச்சோறு கொண்டு வந்தனரென்றால் உனக்கு வேறும் ஒரு கட்டுச்சோறு ஒருவர் கட்டிக்கொடுக்க வேண்டுமோ? வேண்டா, செல்வாய்.

(வி - ம்.) என்கையால்-என்று கூறுவதால். என்கை: தொழிற் பெயர். என்னல்-என்று கூறுதல். ஆய் - தாய், உமை. வாய் இனிய - வாய்த்த இனிய என்க. செம்மை + வழி = செவ்வழி-திருத்திய வழி, வாய்த்த இனிய திருத்திய வழி எனப் பொருத்துக. செல்வாய் நீ - செல்பவன் நீ என வினையாலணையும் பெயராகக் கொள்க. "வேயுறு தோளி" என்பது திருஞானசம்பந்தரா லியற்றப்பட்ட பதிகத்தின் முதனினைப்பு. இது திருமறைக்காட்டில் ஞானசம்பந்தர் நாவுக்கரசருடனிருந்தபோது பாண்டி நாட்டுக்கு வருமாறு வேண்டியது தெரிந்து நாவுக்கரசருக்குக் கூற அவர் 'சமணர்களிடத்திற்குச் செல்வது நன்றன்று, நாளும் கோளும் தீயனவாய்த் தோன்றுகின்றன' என மறுக்க, சிவனடியார் கட்குத் தீமை வாராது நாளும் கோளும் நன்றாம் என்ற கருத்

தமைய "வேயுறு தோளி" எனத் தொடங்கி 'ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்குமிகவே' என இறுதியில் இதுபோல் முடியும் பதிகம் பாடி விடை பெற்றுச்சென்றனர். வரலாறு பெரியபுராணம் காண்க. பொன்னி-காவிரி: குடகுமலையினின்று பொன்னை வாரி வரலாற் பெற்ற பெயர் இது. இடைவிலங்கவும் அவ் வெள்ளப் பெருக்கைக் கடந்து சென்றது சுந்தரமூர்த்தி நாயனர் பாலையை நெய்தலாப் பண்ணியது ஞானசம்பந்தர். இடம்: திருநனிபள்ளி; (திருக்களிற்றுப். 12) காண்க. அதை-அப் பாலைவனத்தை. நெய்தலாக்கிய வுனக்குச் சோலையாக்குவது எளிது. இத்தகைய சிறந்த ஆற்றல் அறிவுள்ள உனக்கு நான் எவ்வாறு வழி கூறுவது? நீயே ஆய்ந்து செல் என்பது குறிப்பு. மேல் ஆனர்-தலைவரானர்; இது சிவபெருமானைக் குறிப்பால் உணர்த்தியது. திருப்பைஞ்ஞீலி என்ற தலத்தில் நாவுக்கரசர்க்குச் சோறு கொண்டுவந்து சிவபெருமான் கொடுத்தார் என்ற வரலாற்றினை யுட்கொண்டது. சிவபெருமானே பொதிசோறு கொணர்வார் என்றால் வழிக்குத் துணையாகப் பொதிசோறு கொண்டு போக வேண்டுமோ? வேண்டுவ தின்று என்ற கருத்து விளங்கப் பொதி சோறும் வேண்டுமோ என்றாள். வழி கூற வேண்டா, பொதிசோறு வேண்டா. நீ செல் என்றதாயிற்று.

## 183 - 190: விருகக்......பொருளன்றே

(பொ - ரை.) பெருமையாகக் கற்பார் பலர் அந் நூலிலுள்ள பொருளைக் காண மாட்டார். காசு பணம் தம் கைக்கு வருவதையறிந்தால் உன்னை (தமிழை) விற்றுவிடுவார். அத்தகைய கொடியோர்பால் நீ போய்ச் சேராதே. கற்றவர்களைக் கண்டால் இகழ்ந்து பேசுவார், அவர்கள் சொல்லும் பொருளைக் கேட்டு இன்பமடையார்; நாயைப் போலச் சள்ளென்று குரைத்துத் துரத்துவார். அப்பான்மையுடையா ரருகே சாராதே. தெளிவாகத் தமிழ்ப் பாயிரத்திற் கூறியபடி அடங்கியிருந்து படியாமல் ஆயிரமும் கற்றுவிட்டதாகக் கூறுவார், அவர்பால் நீ அணுகாதே. ஆராய்தற்குரிய நூல்களைக் கற்றறியாத விளக்கமான மூடர்களுடனே

நீதி முறையாகக் கூறும் அறிவுரைகளெல்லாம் அறியாமை யாகும். ஒன்றும் அறியாத ஒருவனுக்கு நூற்பொருள் காட்டுவோன் அவன் கண்ணுக்கு முன்னே ஒன்றும் அறியாத வனாக மதிக்கப்படுவான். நாணமல் இராதே (நாணியிரு) வாய் திறந்து கூருதே, வினைக் கற்கு முறையறிந்து கல்லா மல் அவையைக் கண்டு அஞ்சி நடுங்கும் சொற்பெருக்குடைய வர்பாற் செல்லாதே. அவர்களுடன் நட்புகொள்ளாதே. அருமையறிந்து உன்னைப் போற்ருதவரை நீ விரும்பாதே. என்றுங் கெடுதலில்லாத சிறந்த செல்வமானது கல்வியே யென்று மனத்துக் கொண்டாய். ஆதலால் நீதான் சிறந்த பொருள். வேறு சிறந்த பொருளில்லை.

(வி - ம்.) விறு - பெருமை. கற்பார் பொருள் காணுர் என்றது, கற்பவர் போல நடித்து நூற்பொருளை யறியாம லுழல்பவரை, நூல்களை வாங்கிப் படிப்பது போல் நடித் துப் பொருள் கொடுத்தால் விற்று விடுவார் என்று தமிழ்ப் பற்றில்லாதாரை யிழித்துக் கூறியது இது. எள்ளுவார் என்பது இடு என்ற துணைப்பகுதியுடன் சேர்ந்து எள்ளிடு வார் என நின்றது; இகழ்வார் என்பது பொருள். எள்ளிடு வார் - குறைப்பார், குலைப்பார். "வணக்கம்வருஞ் சிலநேரங் குமர கண்ட வலிப்புவருஞ் சிலநேரம் வலியச் செய்யக்; கணக்குவருஞ் சிலநேரம் வேட்டை நாய்போற் கடிக்கவருஞ் சில நேரங் கயவர்க் கெல்லாம்'' என்று கயவர் குணத்தைப் பழித்ததும் காண்க. பாயிர முன் சொன்னபடி படியாமல் என்றது, மாணக்கன் நூல் கேட்கு முறைப்படியிருந்து கல்லாமல் முறை தவறிக் கற்ற கல்வியை. நன்னூலின் மாணக்கர் பாடங் கேட்கு முறை "கோடன் மரபே கூறுங் காலை' என்ற நூற்பாவிற் காண்க. ஒண் பேதையர் என்றது மூடர்களிற் சிறந்த முழு மூடர்களை. "மூடர்களின் முன் வைத் தெண்ணுந் தகுதியுடையோர்'' என்பது, மூடரை யெண்ணுங்கால் முந்தி நிற்பரே'' என்ருர் பிரபுலிங்க லீலை நாலுடையாரும். மூடர்க்கு அறிவுரை கூறுவோர் அம் மூடர்க்கு முன் அறிவில்லாதவராவர் என்பது "காணு தாற் காட்டுவான்'' என்ற குறட்கருத்து. நாணு திராதே;

நாணியிரு எனப் பொருள்பட்டது. ஆற்றி னளவறிந்து கற்றவர் அவைக்கு அஞ்சார், அங்ஙனம் முறையுடன் கல்லாதவர் அவைக்கு அஞ்சுவர் என்பது கருத்து. "ஆற்றி னளவறிந்து" என்ற குறட்பாவின் கருத்தும் அது. கூற்றினர் - சொல்லுடையவர், அவையஞ்சும் கூற்றினர் - அவையைக் கண்டு அஞ்சிப் பேசும் பேச்சுடையார் என்க. நீதானே பொருளன்றோ என்றது, நீ பிறரிடத்திற் செல்வதற்குக் காரணம் ஒன்று மின்று. நீயே எல்லார்க்கும் பொருளாயிருக்கின்றாய் என்பதை விளக்கிற்று.

## 190—198: ஆண்டி.........தரித்தேகி

(பொ - ரை.) என்னையாட் கொண்ட வல்லவா! நல்ல திருவாவடு துறையில் உலவாக்கிழி பெற்றவர் உன்னைப் போல் ஒருவர் உளரோ? நல்ல விருப்பத்தை யுண்டாக்குவதற்கு அங்குக் கிடந்த செங்கல்லைப் பொன்னாக்கினை. மண்ணுலக முழுவதும் பொன்னுலக மாக்குவதற்கும் வல்லவன் நீயே! யாவரும் விரும்பிப் பார்க்கும் சிறப்புடைய காவிரிப் பூம் பட்டினத்தைக் குறித்துப் பாடிய ஒரு வஞ்சி நெடும் பாட்டினாற் பதினாறு கோடி பொன் கொண்டது நின் வெற்றியைக் குறித்ததே. பொருளைத் தேடி வழங்கும் நல்லாரிடத்திற் சேர்ந்த வறுமையினும் கல்லாத மூடர்பாற் சார்ந்த செல்வம் துன்பத்தை விளைவிப்பதாம், இதனை நீ கண்டாய் பலரிடத்தும். ஆதலால் கல்லாத கயவர்பாற் செல்வமிருப்பினும் அவர்பாற் செல்லாதே; உன் மேல் அன்பில்லாதவர் இந்திரனைப் போலச் செல்வத்துடன் வாழ்ந்திடினும் அவர்பாற் போகாதே; அங்கே உணவுண்ணாதே. தாம் இன்புறுவதற்குரிய கல்வியால் உலகத்தாரும் இன்பமடையக் கண்டு அக் கல்வியையே பெரும் புலவர் கற்றறிந்தார் விரும்புவர் என்னும் பெருஞ்சிறப்பு உன்பா லன்றோ சேர்ந்தது? திருப்பாற்கட லமிர்தம் உண்டவர்க்கல்லாமல் உண்ணாதவர்க்குப் பசி நீங்குமோ? நீங்காது. உன்னையே சேர்ந்து உன்னை நம்பி வாழாத மக்கள் தெருவினும் அணுகாதே. நல்லறிஞர்களிடத்திலிருந்து தங்கிச் செல். அவ்வாது சென்று.

(வி - ம்.) வல்லவன் என்பது ஈறுகெட்டு அகரம் நீண்டு வல்லவா என விளியாயிற்று. பின் எதுகை நோக்கி வலவா எனத் தொகுத்தலாயிற்று. நல்ல என்பதும் நல என விகாரமாய் நின்றது. உலவாக்கிழி - கெடாத பொன் முடிப்பு. எடுக்க எடுக்கக் குறையா திருக்கும் பொன்; இதனைத் திருவாவடுதுறையில் ஞான சம்பந்தர் இறைவன் திருவருளாற் பெற்றனர் என்பது வரலாறு "கழுமல வூரர்க் கம்பொன், ஆயிரங் கொடுப்பர்போலு மாவடு துறையனாரே" (திருநாவுக். தே) (நல்ல இருப்பு அது ஆக்க - நல்ல திருக் கோயிலைக் கட்டுவதற்காக, செங்கல்லைப் பொன்னாக்கியது திருப்புகலூரில்) இது டாக்டர் உ. வே. சா அவர்கள் குறிப்பு. இது பொருத்தம் அன்று. நல்ல விருப்பு அது ஆக்கவரு செங்கல்லை—விருப்பத்தை யுண்டாக்க வந்த செங் கற்களை என்ற பொருள் பொருத்தமானது; திருப்புகலூரிற் செங்கல் பொன்னாக்கியது, நாவுக்கரசர் பொன்னிற் பற்று டையவரா என்பதை ஆராய்வதற்காக என வரலாறு இருப் பதால். நோக்கு புகார்: வினைத்தொகை, யாவரும் ஆய்ந்து நோக்கும் புகார் என்க. புகார் பாடியது ஓர் வஞ்சி நெடும் பாட்டு என்றது: பட்டினப்பாலை என்னும் நூலினை. இத னைப் "பட்டினப்பாலை யென்னும் வஞ்சி நெடும் பாட்டு" என்றே வழங்கினர் உரையாசிரியர் பலரும்; (யாப். வி. செய் சூ 37 உரை) (யாப். கா. ஒழி. 4 உரை) (இ. வி. சூ. 745 உரை) காண்க. "பாடிய பாக்கொண்டு பண்டு பதினாறு, கோடி பசும்பொன் கொடுத்தோனும்" (சங்கர சோழனுலா 10) "தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன் பத்தொ டாறு நூறாயிரம் பெறப் பண்டு பட்டினப் பாலை கொண்ட தும்" (கலிங்கத்) என வருவன சான்றும். கொற்றம் - வெற்றி. கொற்றத்தை விளக்கியது, காட்டியது எனச் சொல் வருவித்து முடிக்க. கல்லார்கட்பட்ட திரு துன் பத்தை விளைப்பதை நீயும் கண்டாய் காண்பாய் என்ற கருத்து விளங்க 'கண்டாயே என்றாள். கண்டாயே என் பதை முன்னிலையசை யாக்குவதும் ஒன்று. "நல்லார்கட் பட்ட "தாமின் புறுவ" என்ற திருக்குறட் கருத்தறிந்து பொருத்துக, மாவிஞர் கற்றறிந்தார் என்ற இரு சொற்

களையும் ஒன்றுக்கிப் பொருள் கொள்க. ஆர்ந்தவர் - உண்டவர். ஆர்தல் - உண்டல். ஆறுமோ - ஓகாரம் எதிர்மறை. தமிழ் மொழியாகிய உன்னைச் சார்ந்து உன்னை நம்பி வாழ்பவர் எவரோ அவர்பாற் சென்று தங்கியிரு; நம்பாதவர்பால் அணுகாதே என்று தங்கிச் செல்லும் வழி குறித்துக் காட்டினள் எனக் கொள்க. தங்கிச் சென்று மதுரைக்குள் நுழைக என்பது குறிப்பு.

### 198 - 207 : வம்பாகப்.........களிகூர்ந்தே

(பொ - ரை.) இயமன் பின்னிடைந்து ஓடுமாறு பெயர்ந்து நீரோடுகின்ற வையையாற்றிற் புதுமையாக முன்போய், எதிர்சென்று நின்று நீராடி, அன்புடனே வணங்கி நீண்ட இலக்கண நூல்களைக் கற்றவர் மனம்போல ஆழமுடைய வகழியைக் கடந்துபோய் உலகத்தில் வளர்ந்து மேலுமேலும் உயர்ந்து நிற்கும் வேதங்களைப்போல வானத்து மேலுயர்ந்து தோன்று மதிலையுங் கடந்து நீ போனால் மிருதியும், புராணமும், கலைகளும் போல் வேறு வேருகச் சிறிதும் பெரிதுமாகத் தோன்றும் திருவீதிகளை வலமாகச் சுற்றி வந்து நல்வினை தீவினையாகிய இருவகைப்பட்ட வினைகளையும் தொலைக்கும் சிவாகமங்களைப்போல முத்திக்கு விதையாக அறிஞர் கூறும் திருக்கோயிலின் உள்ளே புகுந்து நீ முதலில் தென்பால் நின்று வணங்கி முறையாக அபிடேக முனிவர் தம் அன்புபோல வாய்ந்த தளத்தின் பொருத்தமும் இறைவனையடைந்து தெளியும் தவவேடமுடையார் சிவலோகத்தைச் சேர்ந்து தங்குவதற்கு ஏறும் படிகளை யமைத்துள்ள ஏணியைப்போல் பெருமை பெற்ற தலைமை வாய்ந்த கோபுரங்களும் கூடலின் முன்னைநாளில் மேலிடத்தில் ஒரு நான்கு பெருமேகங்களும் கூடியதுபோன்ற மண்டபமும், மலரிற் பொருந்திய தேனையுண்ணச் செல்லும் வண்டுபோலச் சென்று மாளிகைகளில் வகுத்திருக்கும் பத்திபத்தியான அறைகளின் கட்டளையையும் கண்டு மகிழ்ச்சி மிகுந்து.

(வி - ம்.) யமன் பின் போய் ஓடப் பேர்ந்தோடும் வையை என மாற்றுக. பின் போய் ஓட - புறங்காட்டி

யோட, வையை நீரோடுவதற்கு எதிர் நில்லான் யமன் என்பது, வையையாற்று நீரோட்டத்தின் மூழ்குவாரை யமன் எதிர்த்து நின்று அவனுலகத்திற்குக் கொண்டுசெல் லான் என்பது கருத்து. மூழகியவர் யமனுலகம் அடையார், யமவாதனையும் நீங்குவர் என்றபடி. சத்தம் - இலக்கணம். "சத்தமுஞ் சோதிடமு மென்றாங்கிவை பிதற்றும், பித்தரிற் பேதையா ரில்" (நாலடி. 52) எனவும், "பிரயோக விவேக மென்னும் வடமொழிச் சத்த சாத்திரத்தை" (பிரயோக - க. 1) எனவும் வருவன அப் பொருளுணர்த்துமாறறிக. இலக்கணங் கற்றவர் உள்ளம் ஆழ்ந்து அகன்று இருத்தல் போல அகழியும் ஆழ்ந்து அகன்று இருந்ததென்க. மேன்மே லுயர்ந்தோங்கு வேதம்போல வான்மே லுயர்ந்த மதில் தோன்றிற்று. "மேவரு முணர்வு முடிவிலா மையினால் வேதமு மொக்கும்" (நகர்ப். 9) என்றார் கம்பரும். மிருதி - ஸ்மிருதி என்ற வடமொழி திரிந்து நின்றது. அறநூல் என்பது பொருள். திருவீதி சிறிதும் பெரிதும் ஆகப் பல வேறுபாடுள்ளன. அவ் வீதிகட்கு உவமை, மிருதி, புராணம், கலைகள் சிவாகமம் கற்பார்க்கு இருவினை யொப்பு மலபரி பாகம் உண்டாய் முத்திபெறும் பக்குவமடைவர் என்ற கருத்துத் தோன்ற இருவினையை மோதுஞ் சிவாகமம் என்றாள். சிவாகமமும் திருக்கோயிலும் இருவினையை மோதித் தொலைத்து முத்திக்கு வித்தாகும் என அறிஞர் கூறுவர் என்ற கருத்தமைத்து நின்றது; 'சிவாகமம் போல்'' எனத் திருக்கோயிலுக்கு உவமை கூறியது. மதுரைச் சொக்க நாதர் கோயிலுட் புக முதலில் தெற்குக் கோபுரவாயில் வழிச்செல்வது பண்டையோர் மரபு என்பதை "தென்பால் முன்னே வணங்கி" எனக் குறித்தனள் போலும். அபிடேக முனிவர் ஒரு தேர் முதலிற் செய்தனர்போலத் தோன்று கிறது தளம் + இசையும் = தளத்தின்பொருத்தமும், தன் + நேயம் = தனது அன்பு; போல் ஆம் தளம் = அன்புபோல உண்டாகிய தளம் என்க. "ஐயர் மகிழ்ந்தேற வபிடேக பண்டாரம், செய்த திருத் தேர்போலச் செய்தேமோ" என விறலிவிடு தூது 950 இல் கூறப்படும் தேர்த்தளமே ஈண்டுக் கூறப்பட்டதாம். அபிடேக முனி: அபிடேக பண்டாரம்

என்பவரையே யுணர்த்தியதாகக் கொள்க. வேறு வரலாறு கண்டிலம். படிவர் - விரதமுடையவர்; தவவொழுக்க முடையவர். சிவலோகத்திற்கு ஏறிச் செல்லப் படி வகுத்து ஏணி நிறுத்தியிருப்பதுபோலக் கோபுரங்கள் அடியிலிருந்து ஒன்பது வாயில்களை ந்து நிற்கின்றன என விளக்கம் கொள்க. நான்கு மேகங்களும் வந்து வளைந்து நின்று மதுரையை அழியாமற் காத்தன என்பதும், அன்று முதல் நான்மாடக்கூடல் எனப் பெயர் வழங்கியது என்பதும் புராண வரலாறு. "வாடுவோர் தம்மைப் போற்ற வயங் கொளி மாநகர்க் கூட், கூடருமேக நான்கு மாடமாக் கூட லாலே, நாடவ ரதிசயிப்ப நான்மாடக் கூடலென்று, பீடுடை நகர்க்கு நாம மெங்கணும் பிறங்கிற் றன்றே" (நம்பி திருவிளை.) என்ற கவியும் காண்க. "நான்மாடக் கூடல்" எனப் பல நூல்களினும் பெயர் வழங்குவதும் உணர்க. திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் இவையே நான்கு எனவும்; கன்னி, கரியமால், காளி, ஆலவாய் இவையே நான்கு எனவும் (கலித். நச். 92) விளங்கும்: மதுரைக் காஞ்சி 429 ஆம் அடிக்குறிப்பும் இதனைப் புலப்படுத்தும். மட்டு - தேன். அறைக்கட்டளை - அறையின் ஒழுங்கு அறையின் வரையறை. முழுகியே, அகன்றுபோய், கடந்து என்பன போன்ற எச்சங்களை மடுக்கிக் களிகூர்ந்து எனக் கொண்டுவந்து நிறுத்துக. மேல் தொடருவது காண்க.

## 207 - 218 : இட்டமணிச்.......பொருக்கெனப்போய்

(பொ - ரை.) வானவர்க்கிறைவனால் இடப்பட்ட மணிக ளழுத்திய அரியணைமேல் வீற்றிருக்கும் அரசிருக்கை சொக்கருக்கு எய்தியதுபோல் எங்கேனும் ஒரு கடவுளர்க்குக் கிட்டுமோ? கிடைப்பதரிது ஒளிறும் வீரக்கழல் புனைந்த இனிய தாமரை மலர்போன்ற சிவபெருமான் திருவடிக் காட்சியைக் கண்டு அவர்க்கே செந்தாமரைப் பூப் போன்ற கண்ணைப் பறித்துச் சாத்திய திருமாலும், உயர்ந்த தூய்மை யான குற்றமற்ற திருவடியில் வணங்காத தலையொன்றைக் கையிற் கொடுத்த தெய்வமாகிய பிரமனும், இழந்த வலிமை

யும் பெருமையும் தனக்கு வகுத்துத்தந்த கடம்பாடவிக்கு விமானத்தை வகுத்துத்தந்த இந்திரனும், ஆங்குத் தேன் ஒழுகும் அழகிய மலர்போன்ற பாதத்தை நெஞ்சினுட் பதித்து மணிகள் அழுத்திய முடிகள் ஒன்றோடொன்று அழுத்தாமல் நீக்கி வணங்கும் பொருட்டுங் கணநாதரும், கூறுகின்ற வெறுப்பும் சினமும் கொண்ட உட்பகையைத் தொலைத்த வலியுடைய ஞானமுனிவர்களும் அருகில் சூழ்ந்து வரவும், நிமையில்லாத அருமையான திசைக் காவலர்கள் கண்ணாடி முதலியவற்றை யேந்தி நின்று காட்சிக் குறிப்பைக் கண்டு ஏவல்செய்து நிற்கவும், துதித்து முன்னின்று இருவரும் எண்மரும் நிறைந்த பதினொருவரும் பன்னிருவரும் ஆகிய முப்பத்து மூவரும் ஏவல் செய்யவும், நந்திதேவர் தமக்கு முன்னே நிற்கும் கூட்டத்தை வெள்ளப் பெருக்கு என்று பிரம்பினை எடுத்துப் புடைக்க ஓங்கிய போது வெள்ளம் இருபுறமும் ஒதுங்குவதுபோல ஒதுங்கிப் பதினெட்டுக் குலத்தேவர் தம் கோடிக்கணக்கான முடிகள் பதினெட்டு நிலத்தோர் முடிகளால் நெரியவும் உலகத்திற் செருக்கும் நண்பும் கொண்ட தேவியாகிய அங்கயற் கண்ணம்மையுடன் வீற்றிருக்கும் திருக்கோயிலுட் பொருக் கெனச் சென்று அடைந்து.

(வி - ம்.) இட்ட - இடப்பட்ட, தேவர்கோனால் இடப் பட்ட என வருவிக்க. "அழதயில் வாழ்க்கைத் தேவர்கோ னிழிச்சிய, மதமலை யிருநான்கு பிடர்சுமந் தேங்கிச், செம் பொன் மணி குயிற்றிய சிகரக் கோயிலுள், எமையாத் தண்ணளி யுமையுடனிறைந்த, ஆலவா யுறைதரு மூலகார ணன்" என்பது கல்லாடம். இந்திரனிட்ட சிங்காதனமே முதன்மையுடையது. தேங்கமலத்தேசு என்றது கழல்சூழ் என்ற அடையால் திருவடித் தாமரையின் ஒளியை யுணர்த்தியது. அவர்க்கே-அச் சிவபெருமானார்க்கே. கண் கொடுத்த புத்தேள் - திருமால். கண்ணைப் பறித்துத் திருவடியி லிட்டுப் பூசித்துப் பின் கண்பெற்றுச் சக்கரமும் பெற்றார் என்பது கதை. ஓங்கு அடி; அமல அடி; மை இல் அடி எனக் கூட்டுக. வணங்காத் தலை என்றார்; பிரமன்

ஐந்து தலையுள்ளமைமையால் சிவனுக்கு நிகர் எனச் செருக்குற்றான் என்பதை விளக்க. செருக்குற்ற தலையே சிவன் கையில் பிச்சை யோடுபோல ஒட்டி நின்றது என்பது குறிப்பு. இத் தலை தான் செருக்குக்கொள்ளக் காரணமாயிருந்தது; இதனை நீங்கள் எடுத்து வைத்துக்கொள்க என்று கொடுத்தது போலக் கையில் பிரமன் தலை காணப்பட்டது என்று வியப் புறக் கூறியதாம் இது. மொய் - வலிமை. மானம்- பெருமை. இவ் விரண்டும் இழந்த தனக்கு அவற்றை யளித்த கடம்பாடவி என்க. இந்திரன் பழியாற் பற்றப் பட்டு வலியும் பெருமையும் இழந்து மதுரையை யடைந்து பெருமைபெற்ற வரலாற்றைக் குறிப்பித்ததாம். கடம் பாடவி - கடம்பமரம் சூழ்ந்த காடு. இது மதுரைக்கு ஒரு பெயர். மானந்தனை வகுத்த வானவன் - இந்திரன், விமா னத்தை யமைத்து விடுத்த தேவன் அவனாதலின். மானம். விமானம். தன் : சாரியை. மணிமுடிகள் அழுத்தாதே நீக்கி வணங்க எனக் கூட்டுக. கணாதரும் முனிவரும் என உம்மை விரிக்க. முரண் + போதம் = முரட் போதம் - வலிய ஞானம். துனி, சினம், பகை செற்ற வலிய ஞானம் என ஞானத்திற்கு அடையாக்குக. இந்திரன் முதலிய எண்டிசைக் காவலரையும் திசைப்பாலர் என்றாள். அத்தம் - கண்ணாடி. தெரிசனக்கண்-கட்குறிப்பு, பார்வைக் குறிப்பு. ஏவல் செய்வோர் குறிப்பறிவோராயிருப்பர் என்ப தனை அறிக. இருவர் - அசுவினிதேவர்; மருத்துவர். எண்மர் - அட்டவசுக்கள்; இவர் எண்மர் ஒரு கூட்டத் தார். பதினொருவர் - உருத்திரர். சிவன்போலுந் தோற்ற முடையவர். இவர் ஒரு குழுவினர். பன்னிருவர் - சூரியர்; திங்கள்தோறும் ஒவ்வொரு சூரியர் தோன்றுவர் எனவும் அவர் பெயர் வேறுவேறாகக் கூறப்பட்டிருப்பதும் காண்க. இவர்களையே முப்பத்து மூவர் தேவர் என்பது நூல் மரபு. "இருவ ரெண்மர்பதி னொருவர் பன்னிருவரெனும் விண்ண வர்கண் முப்பத்து மூவரே" (மீ. பிள்ளைத்.) என வருவதுங் காண்க. உதக விருபாலின் - வெள்ளம் இருபாலும் ஒதுங்கு வது போல. மண்ணுலக மானவரும் விண்ணுலக வானவரும், நெருங்கி முடியோடு முடி உராய்ந்து நெரிய நின்று வணங்

கும் சினகரம் எனத் திருக்கோயிற் சிறப்புத் தோன்றியது. பொருக்கென: விரைவுக் குறிப்பிடைச் சொல். போய் எய்தி நீயும் கண்டு வணங்குக என்பது.

219 - 230 : எந்தாயென்.........முடிமேற் சூடிய

(பொ - ரை.) எந்தாயே என்று துதித்துச் சென்ற இடைக்காடன் பின்னடந்து சென்ற செந்தாமரை மலர் போன்ற திருவடியும், வந்து சிந்தை தெளிந்து எழுத்தினை யறுக்கத் தொடங்கிய தென்பாண்டி நாட்டு மன்னன் பொருட்டு இடக்கால் வலக்காலாகத் திரும்பிய அழகிய துடையும், போர்முறை கற்பிக்கும் ஒரு பணிக்கனுக்குப் பகையாகச் சினந்து ஆயுதமும் உடைவாளும் சேர்த்து அழகிய கச்சிறுக்கிக் கட்டிய இடையும், அடிமையாகி வழி பட்ட வந்தியின் பொருட்டுத் துணிக்குப் பொருத்தமாக இட்ட பிட்டுணவைக் கரத்தால் அள்ளியள்ளி யுண்டு பசி நீங்கிய வயிறும், ஒரு தாயையடுத்தும் முலைப்பாலுண்டறி யாத அவர் தாம் பன்றிக் குட்டிகளின் வாயின் முலைப்பாலை யூட்டிய மார்பும், ஆணிப் பொன்னாற் செய்த தாயமுடியிற் பதிப்பதற்காக ஒரு பாண்டியனுக்கு மாணிக்கங் கொணர்ந்து விற்ற மலர்போன்ற கரமும், உரிமைக்காக அழகிய தழை வாய்ந்த ஆத்திமலரைப் புனையாமல் வேப்ப மலர்மாலை சூடிய அகன்ற தோளும், காக்கைசெய்த போரால் வருந்திய கரிக்குருவி வாழ்வதற்குக் காதில் உபதேசம் செய்த கோவைக் கனிபோன்ற வாயும், குற்றமில்லாத சொல் வாயி லாக நீயிருந்து வாழுமாறு உனக்குக் கோயிலாகக் கொடுத்த சங்கக் குழையணிந்த செவியும், வைசிய குலத்துப் பெண் ணொருத்தியின் பொருட்டுச்சென்று அவள் கண்ணீர்பெருகி யழக் கண்டு அவளைத் தழுவித் தமது கண்ணீரால் அவள் துயரத்தை யாற்றிய இருகண்களும், தெளிந்த நற்பண்புடை யார் ஆகிய மணிவாசகப் பெருமான் பாடிய இசையுடன் கூடிய பாடலுக்கும் வந்தி தந்த பிட்டிற்கும் மண்சுமந்த ஒளி யழகு வாய்ந்த சென்னியும் ஆகிய இவற்றையெல்லாம் கண் களில் ஏந்திக் கண்டு களிகூர்ந்து மனம் கசிந்து கசிந்து உருகிப் பணிபுரிந்து திருவடித் தாமரையை முடிமேற் புனைந்து.

(வி - ம்.) அடிமுதல் முடிவரையுள்ள உறுப்புகளின் சிறப்புக் கூறுகின்றார். இடைக்காடன் என்ற புலவன் பாண்டியன்மேற் பாடிக் கவிமரங்கேற்ற அவன் அப் பாடலை மதியாது வறிதே யிருந்தது கண்டு மனம் வருந்திச் சொக்கநாதர் திருமுன் கூறிச்செல்ல அவ்விடைக்காடன் தங்கிய இடத்திற்கே இறைவரும் சென்றிருந்தார் என்பது வரலாறு. திருவிளையாடல் இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலம் காண்க. பாண்டியனொருவன் காலைமாற்றி யூன்றி ஆடவேண்டும் என்று வேண்ட மாறியாடாத வியல்பு கண்டு தன் கழுத்தினையரியத் தொடங்கப் பின்பு இறைவர் கால் மாறியாடினர் என்பது கதை. கான்மாறியாடிய படலம் காண்க. துடை திரும்பின் காலை மாற்றிவைக்கக்கூடும் என்பது தோன்ற மாறித் திரும்பு மணிக்குறங்கும் என்றாள். குறங்கு - துடை. பணிக்கன் - போர்த் தொழில் கற்பிக்கும் ஆசிரியன். "பண்புடையா னொருபணிக்கன்" "தீதிலா வினிமை தருமுயர் பணிக்கன்" "கோதிலா மனப்பணிக்கன்" என (திருவால 1,3,14) வருவன காண்க. பணிக்க னொருவன் பொருட்டாக அவன் பகைவனைக்கொல்ல அவன் வடிவமாகச் சென்று கொன்றார் என்பது. அங்கம் வெட்டின படலம் காண்க. துணிக்கு அமையச் சொரிந்திடும் பிட்டு எனக் கூட்டுக. "அழுக்கடைந்த பழந்துணி யொன்றரைக் கசைத்து" என மண்சுமந்த திருவிளையாடலில் வருவது துணியை யுணர்த்தும். வந்தி: பிட்டு வாணிச்சியின் பெயர். உதரம்-வயிறு. பிறப்பும் இறப்பு மில்லாதவர் என்பது தோன்ற "தாய்முலைப்பா லுண்டறியாத் தாம்" என்றாள். அறியாதவர் பால் ஊட்டியது வியப்பு என்பது குறிப்பாற் றோன்றியது. இதனைப் பன்றிக் குட்டிக்கு முலைகொடுத்த படலத்திற் காண்க. வழுதிக்கு - பாண்டியனுக்கு. ஆணிக் கனகம்-உயர்ந்த மாற்றுடையபொன்.கனகத்து முடி அழுத்த மாணிக்கம் விற்ற என மாற்றிப் பொருள் கொள்க. ஒரு பாண்டியனுக்கு முடிசூட்டுவதற்குத் தொடங்கியபோது முடியிற் பதிப்பதற்கு மாணிக்க மணியின்மை கண்டு மாணிக்கம் விற்கச் சிவபெருமான் வந்தார் என்பது; இதனை மாணிக்கம் விற்ற படலத்துக் காண்க. படலை மாலை எனவும்

பொருள் தரும். சுந்தர பாண்டியராக வந்து அரசுரிமை யேற்றபோது பாண்டிய மன்னர்கட்கு உரிமையான வேம்பு மாலை பூண்டனர் என்பதை விளக்கியது. காணிக்காக-உரிமைக் காக; பெருமைக்காகப் பூண்டதன்று என்க. ஒப்பு-ஒழித்த, நீக்கிய. கொடி - காக்கை. கொடி ஓம்புவாதில் எனக் கொள்க. கரிக்குருவிக் குபதேசஞ் செய்த படலம் காண்க; நீ யிருந்து வாழும்படி என்றது தமிழ்மொழி தங்கிவாழ, இசை பாடுமாறு செவியுள் தும்புருவை வைத்திருக்கும் செய்தியைக் குறித்தது. "தும்புருவுமீசன் றுஃளச் செவிக் குள்ளே புகுந்தான்" என வருவதும் காண்க. தமிழுக்குத் தம் செவியை யிடமாக்கியது "சங்கமெங்கள் குழை" (தக்கயாகப் 714) என்பதனாலும் அதன் உரையாலும் அறியலாம். தெண் ணீரார் - தெளிந்த நீர்மையுடையார். நீர் - பண்பு. மணி வாசகரைக் குறிப்பாலுணர்த்தியது. மண்சுமந்த பாடல் என்பது குறிப்பு. பாவை - பெண், உவமை யாகுபெயர். இது வந்தியைக் குறித்தது. கண்சுமந்து என்றது கண்களிற் பதித்து; அழுத்தி என்று பொருள் கொள்க. கசிந்து கசிந்து: அடுக்குத் தொடர். தாள் முடிமேல் சூடி என்றது திருவடி களில் முடியைத் தாழ்த்தி நிலத்தில் வீழ்ந்துவணங்கி என்று விளக்கம் கொள்க. அடிமுதல் முடிவரை கண்ணுட் பதித்துப் பின்னர் வணங்கி என்பது.

**230 - 245 : மண்டும்......போற்றுவாய் நீயும்**

(பொ - ரை.) நெருங்கிய விண்மீன் கூட்டங்கள் தம் தலைமைக் குலத்தைச் சார்ந்ததென்று அறிந்து வந்து நின்றனபோல அடுக்கடுக்காக விளங்கும் விளக்குகள் எதிரே தோன்றவும், எனையே வெருதே செங்கதிரும் உண்டு என் குலத்து வெண்ணிலவு முண்டு என்று கூறுவதுபோலத் தங்க விளக்கும் ஆரவிளக்கும் அசைந்து எரியவும், ஒப்பற்ற மீனக்கொடியை யுயர்த்தின் எங்கும்யா னெங்கிருப்பேன், என்று உயர்ந்த இடபக்கொடி யுரைப்பதுபோல் ஆங்கு இடப விளக்குச் சிவந்து தோன்றி அசையவும், நீங்காத அருள் பரவிய பன்றி யுருவான அவ்விறைவனுக்கு மகிழ்ச்சியுடன் புருடா மிருக வடிவுடைய விளக்கு நின்றுபோற்றவும், பகை

வாக வழிவழி வந்த சூரிய குலத்தார் வருவது கண்டு நடுங்குவதுபோல அருகில் உள்ள தட்டுகள் அசையவும், கதிர், மதி என்ற இருசுடர்களுக்கும் முன்னே உன்னையே சிறந்த சுடர் என்று சொக்கர் காட்டுவதுபோல அக்காலத்தி மிகவும் ஒளியுடன் விளங்கவும், தமக்குத் தக்கவ ளாகிய உமாதேவியாருடன் எனக்கும் அஞ்சியொளித்துக் கொண்டார் போலும் என்று கங்கை தேடுவதுபோல அழகிய கும்பத்திலேற்றிய விளக்கு எதிர் சென்று சூழவும், தமிழ்ச் சொல்லுக்கு மன முருகும் அன்பு மிகுந்த அடியார்கட்கு அளிக்கும் முத்தி இதுதான் என்று காட்டுவதுபோலக் கற் பூரத் தட்டில் அழல் எழுந்து எரியவும், அழகாக நம்முடைய குலத்திலும் வந்து தோன்றினர் சிவபெருமான் என்று சூரியன் மகிழ்ந்து அங்கு வந்ததுபோலக் கண்ணடி யவ்விடத் திற் பொருந்தவும், இங்கு மன்னர் எமது குலத்தவராயினர் என்று பிறையானது காட்டுவதுபோல உயர்ந்த முடிமேல் வெண்குடை யொளிவிட்டு விளங்கவும் முந்திப் பெருகி எழு கின்ற கடலின் வெள்ளிய திரைகள் முற்காலத்தில் மாமிக் காக வந்தனபோலத் தோன்ற வெண்சாமரை வீசவும், விளை யாடல் செய்யும் பாம்பாட்டுஞ் சித்தர் இவர் என்று நீண்ட பாம்புகள் படமெடுத் தாடுவதுபோல ஆலவட்டம் எதிர் நின்று காற்றுவீசவும், நாட்டைவிட்டு நீங்காத இளமை யான நல்ல தென்றற் காற்ருனது நம் மன்னர் இவர் என்று கருதி வந்து காண்பதுபோல அழகிய விசிறிகள் காற்றினை வீசிக் குளிர்ந்து நெருங்கவும் விடியலில் திருவனந்தல் முதலாக அடியார்கள் வந்து வழிபாடு செய்யுங் காலத்தில் பல வடிவுள்ள தேவர் பலருடனே கூடித் திருமுன் நின்று நீயும் போற்றுவாய்.

(வி - ம்.) திருக்கோயில் வழிபாட்டிற்குரிய (ஆராதனைக் குரிய) பலவகை விளக்குகளின் காட்சி கூறுகின்றுள். அடுக்கு இலங்கு தீபம் - அடுக்கடுக்காக விளங்கும் விளக்கு; வட்ட வடிவாக அடுக்கடுக்காகப் பொருத்திக் காட்டும் விளக்கின் காட்சி. இது சிவபெருமான் திருமுன் இலங்குவது. விண் மீன்களெல்லாம் தம் நாயகர் குலத்திற் ருேன்றியவர் என்று

நெருங்கி வந்து நின்று காண்பதுபோல இருந்தது என்பது. சுந்தரபாண்டியராக வந்து திருமுடி புனைந்து அரசு புரிந்தவர் இவர் என்று உடுக்குலங்கள் உற்றறிந்து கண்டன வென்று கூறுமாறு இலங்கின. தங்கவாரத் தீபம்-தங்கத் தீபம்; ஆரத் தீபம் எனப் பிரித்துக்கொள்க. தங்கத்தாற் செய்த விளக்கு. முத்துக்களாற் செய்த விளக்கு. தங்க விளக்கு வெங்கதிர் போலவும், ஆரவிளக்குத் தண்கதிர் போலவும் தோன்றின. அத் தோற்றம் உன் குலத்திற்கு முதலாகச் செங்கதிரும் உண்டு; வெண்கதிருமுண்டு என்று விளக்குவது போன்றிருந்தது. வெங்கதிர் சூரியன், சிவ பெருமான் சோழமன்னராகத் திருவாரூரில் அரசாட்சி செய்தமையின் உன்குலத்து வெங்கதிருமுண்டு என்று விளக்கியதாம். "நங்குலத்து வந்துதித்தார் நாதரென்று பானுமகிழ்ந் தங்குறல்போல்" (239) என்பர் பின்னும். உன்குலத்து வெண்மதியுண்டு என்று கூட்டுக. ஆதலால் கடுத்திடேல் என்னை எனக் கூறுவதுபோலத் தங்கவாரத் தீபம் அசைந்தது என்க. கடுத்திடேல் - வெறுத்திடாதே. இடபதீபம் என்பது ஒருவகை விளக்கு. ஆராதனைப் பொருள்களில் ஒன்று. அது விடை வடிவமாக வமைத் திருப்பது. பாண்டியர்க்குரிய மீனக்கொடியை நீ உயர்த் தினை யெனில் நான் எங்கிருப்பேன் என்று சினந்து விடைக் கொடியானது அழல்வடிவாக எழுந்து அசைவதுபோலத் தோன்றிற்று. அழன்று-சினந்து. அழல்வடிவாய-தீ வடிவமாக; சினத்தின் வடிவமாக; என இருபொருள் கொள்க. புருடாமிருகத் தீபம் என்பது ஒருவகை விளக்குப் போலும். மிருக வடிவமானார் என்று சிவபெருமானை மகிழ்ந்து போற்றியதுபோலத் தோன்றியது அதன் காட்சி. புருடாமிருகம் போன்ற வடிவ விளக்குச் சிவபக்திச் செல்வத்தை வளர்க்கும் என்று தலபுராணங்கள் பல கூறும். சிவ பெருமானுக்குத் திருவிழாக் காலங்களிற் புருடாமிருகமும் ஊர்தியாக அமைக்கப்பட்டுள்ளமை அதன் சிறப்பை விளக்கும். அண்மையில் பூசைக்குரிய தட்டுகள் அசையும் காட்சி, பகைவராகிய சோழர்குல முதல்வனாகிய சூரியன் வருவதற்கு நடுங்குவதுபோலத் தோன்றிற்று என்க. பானு-

சூரியன். வரல்+நடுக்குற்றது=வானடுக்குற்றது-வருவதற்கு நடுங்கியது. மருவார் வருகுலத்து ஆர்-பகைவர் வந்த குலத்துப் பொருந்திய. உன்னே - உனை எனக் குறைந்து நின்றது. உன்னை (தமிழாகிய) உன்னே. இருசுடர் - சூரியன் சந்திரன் என்பன. அக்காரலத்தி இருசுடர்க்கும் உயர்ந்த ஒரு சுடராக உன்னைக் காட்டுதல்போல ஒளிவிட்டு விளங்கிற்று என்க. அக்கரா+ஆலத்தி=அக்காரலத்தி. இது வடமொழிச் சந்தி எழுத்துகள் பொறிக்கப்பட்ட பொருள் போலும். எழுத்து வடிவம் தமிழ் வடிவமாகக் கற்பித்தது இது. பொற்கும்ப தீபம்-பொற்குடத்தி லேற்றிய விளக்கு. கங்கை தன் கணவரைத் தேடுவதுபோல எதிர்நின்று சூழ்ந்தது. குடத்துள்நீர் இருப்பது குறித்துக் கங்கை தேடுவது போல எனக் கற்பித்ததாயிற்று. சொற்கு+உருகும்=சொற்குருகும்-பாடலுக்கு மனமுருகும். அற்பு ஊர் அ தொண்டர் - அன்பு எழுந்த அத் தொண்டர். கற்பூரத் தட்டிற் கனல்பற்றியெரிந்து கற்பூர மறைவது போலத் தொண்டரும் ஒளிமயமாய் இறைவனுட னிரண்டறக் கலந்து மறைவர்; இதுவே முத்தியென்பதை எடுத்துக்காட்டியது கற்பூர விளக்கு எனக் கொள்க. கண்ணடியங்கு விளங்குவது சூரியன் மகிழ்ந்து வந்திருப்பதுபோலத் தோன்றியது என்க. 232 ஆம் கண்ணியின் பொருளமைந்தது. பிறை என்பது நிறை நிலவை யுணர்த்தியது. முடிமேல் வெண்குடை விளங்குவது வெண்ணிலவு தங்குலத்தரசர் என்று சிவபெருமானைக் காட்டுவது போல இருந்தது. துங்கம் - உயர்வு சோதி - ஒளி. பொங்கியெழும் வெண்டிரைகள்; மூந்து வெண்டிரைகள், கடல் வெண்டிரைகள்: எனத் திரைக்கு அடையாக்குக. வெண்சாமரை வீசுவன வெண்டிரைகள் வந்தனபோலத் தோன்றின. மாமிக்காக ஏழு கடலழைத்தபோது வந்தனபோல இங்கும் வந்தன அலைகள் என்பது கருத்து.

விந்தை - வேடிக்கை; விளையாட்டு, சித்தர்களிற் பாம்பாட்டுஞ்சித்தரும் இருப்பர் என்பது தோன்ற ஆடரவச் சித்தர் என்றார். எல்லாம் வல்ல சித்தராக வந்து பல விளையாடல் புரிந்தவர் இவர் என்பதை விளக்கியதாயிற்று. ஆல

வட்டம்-பெரிய விசிறி. அஃது ஆடுவது பாம்பு படமெடுத்து நின்றுடுவதுபோலத் தோன்றிற்று என்க. நாடு அகல - நம் நாட்டைவிட்டு நீங்காத. வால் - தூய்மையான. வால் - தூய்மை, தென்றற்காற்று நம் மன்னர் என்று கருதிக் காணவந்தது போல விசிறி காற்று வீசியது என்க. அடுக்குத் தீபம், தங்கத் தீபம், முத்துத் தீபம், இடப தீபம், புருடா மிருக தீபம், தட்டம், அக்காலத்தி, கும்ப தீபம், கற்பூரதீபம் ஆகிய தீப வகைகளும்; கண்ணாடி, குடை, சாமரை, ஆலவட்டம், விசிறி முதலிய பொருள்களும் பூசைக்குரியவை என்க் காண்க. இவற்றின் காட்சியை ஆசிரியர் கற்பனை செய்து காட்டும் புலமைத் திறத்தையும் உள்ளத்துட் பொருத்தி யின்புறுக. தற்குறிப்பேற்றவணி. இவை. திருவனந்தல் - விடியலிற் காட்சிக்குரிய காலம். திருப்பள்ளி யெழுச்சி என்பதும் அது. மதுரையிற் சிறப்புடைய காலம் திருப்பள்ளி யெழுச்சியே. உரு + அனந்தம் + தேவர் என்பதை அனந்தம் உரு தேவர் என மாற்றுக. பலவகை வடிவான தேவர்கள் என்பது பொருள். தேவர்கள் பலருடனே மருவி நீயும் போற்று வாய் என்றாள்.

## 245 - 248 : புரோகிதரை............மாமருந்தைத்

(பொ - ரை.) புரோகிதர்களை முதலில் விடுத்து வரு கையை அறிவித்துத் துதித்தபின் அருமையான வலிமை யுடைய சிவாகமத்தோராகிய ஆதிசைவர் தம்பால் அடைந்து பூசைக்குரிய பொருள்களைப் படைத்துத் திருமுன் னில்லாமல் ஒருபுறமாக ஒதுங்கி நின்று அருமையுடன் மூவர் கவியே முதலாகிய ஐந்து கவிகளையும் மூவராகவே நின்ற இறைவர் தம் முன்பு பாடித் துதித்து ஒழியாமல் திருவடி களை நினையாத தீவினை புரிந்த பாவியொருவன் செய்த மாபாதகத்தையும் தீர்த்த பெருமையுற்ற மருந்தாகிய சிவ பெருமானை.

(வி - ம்.) புரோகிதர் என்றது வேதாகமங்களை, வேதாகமங்களை ஓதி முதலிற் புரோகிதர் இறைவனை வழி

படுவர் என்பதை விளக்கியது. ஆதிசைவர் என்றது பூசைக்குரிய அந்தணர்களை. பட்டர் பூசித்துத்தருவதற்குரிய தேங்காய் பழம் முதலியவற்றை 'உரிய' என்றாள். படையா - படைத்து; செய்யா என்ற வாய்பாட்டு வினையெச்சம். மூவர் கவி-தேவாரம்; ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவராற் பாடியவை யாவும் தேவாரம் எனப் பெயர் பெற்றவை. கவி ஐந்து என்பன, தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் எனக்கொள்க. துதிக்குரிய பாடல்களிற் சிறந்தவை இவ்வைந்து முறைகளிலும்உள்ளவை என்று கொள்க. சிவபெருமான் மூவர் வடிவமாகவே நின்று திருவருள் காட்டி அவர்தம் செயல் யாவும் தம் செயலாகவே விளக்கினர். ஆதலின், ''மூவராய் நின்றார்'' என்றாள். சீ - சிறப்பு. மங்கலம்—பாதம், அடி; திருவடி. ஒரு மறையோன் கடவுள் வழிபாடு மறந்து தாயைப் புணர்ந்து தந்தையைக் கொன்று மற்றும்பல பாவச்செயல்புரிந்த பாவங்களை நீக்கிய அருமை தோன்ற ''மா பாதகந் தீர்த்த மாமருந்தை'' என்றாள். மாபாதகந் தீர்த்த படலங் காண்க. இனித் துதிக்கு முறையும் தூது சொல்லுமுறையும் கூறுவாள்.

## 248 - 256 : தீபமணிப்............வல்லமையோ

(பொ - ரை.) விளக்குப்போன்ற மணிகளையுடைய படங்கொண்ட பாம்பு சுற்றி யெல்லை காட்டிய மதுரையை யாளும் பாண்டியனே! அழகிய துதிக்கையுடைய யானைகள் சுமந்த விமானத்துள்ளுறையும் கண்மணிபோன்றவனே! அரசனாக வந்து மைதோய்ந்த கண்களையுடைய கரும்பு போன்ற தடாதகைப் பிராட்டியாரைக்கூடி யென்றும் பிரியாது வாழும் முக்கண்ணுடைய கனிபோன்றவனே! உலக முழுதுக்கும் ஒரு முதல்வனே! மிகுந்த நீர்ப்பெருக்குடைய கங்கை நதிக்குத் தலைவனே! கன்னியாகுமரித் துறைக்கு மன்னனே! அரியணைமேல் அமர்ந்திருக்கும் பாண்டி நாட்டரசனே! அடியார்க்கு வாய்த்த செல்வம் போன்றவனே! எமது கடவுளே! தொண்டர்கள் கருத்தினால் எண்ணியபோது விளையாடிவரும் கண்ணாடிப்பாவைபோல அவர்கள் உடன்கூடி விளையாடி

வந்த தெய்வமே! தேடுதற்கு அருமையான அன்பர்கள் தேடிய நாளில் மனமகிழ்ந்து அவர்கள் முன்னே யோடிவந்த திருவிளையாடல் இனிமேல் காட்ட இயலாதோ? திருவருளோடு முன்வந்து பழிக்கஞ்சியவர் என்று உலகத்திற் பரவும் புகழ் சேர்ந்த பொருத்தமான பெயர் இனிமேற் பெறவேண்டாவோ? ஆசையுடன் காண்பதற்கு வந்தவர்மேற் பொடிபோட்டு மனத்தை மயக்கினர் சொக்கலிங்கமென்று எவருஞ் சொல்லமாட்டாரோ? கரும்பினை வில்லாகக்கொண்ட அழகிய கைகளையுடைய மன்மதன் தானே வந்து அரசாளுமாறும் இளமையான ஒரு மங்கையைக் காம மயக்கங்கொள்ளுமாறுஞ் செய்வது வலிமையாகுமோ?

(வி - ம்.) பைநாகம் - படத்தையுடைய பாம்பு. சூழ-சுற்றிக் காட்டிய மதுரை. ஒரு பாண்டியன் மதுரை நகரழிந்த ஊழிக் காலத்தில் எல்லை காணவியலாது இறைவனை வேண்டியபோது தம் சடைமேலுள்ள பாம்பினை விடுத்து மதுரை நகர்க்கு எல்லை காட்டி வரப்பணித்தார் என்பதும், அது வந்து வளைந்து சுற்றிக் காட்டியது என்பதும் அதனால் ஆலவாய் என்ற பெயர் மதுரைக்கு அமைந்த தென்பதும் வரலாறு. திருவாலவா யான படலம் காண்க. கைநாகம்-யானை. மணி - அழகு. நாகங்கள் பாரமாகத் தாங்கிச் சூழ்ந்த கோயில் என்க. கோயில் - விமானம். இந்திரனால் அமைத்து விடுத்த விமானம், இதன் விளக்கம் முன்னர்க் காண்க. மன் ஆக - மன்னன் ஆக வந்து. கரும்பு என்றது மைக்கண் என்ற அடையால் உமையம்மையை யுணர்த்தியது. பிரியாத என்றது, ஒரு பாகத்திலிருத்தியதைக் குறித்ததாம். கனி இனிப்பதுபோல அடியார் மனத்தில் இனிப்பவர் என்க. கங்கா நதிக்கு இறை என்றது கணவர் என்பதைக் குறித்தது. கன்னித்துறை - குமரித் துறை. பாண்டியர் ஆட்சிக்குட்பட்டது. ஆதலின், அரசே என்றாள். நற்பாவைபோல் என்றது கண்ணாடியின் நிழலினை. கண்ணாடியை அருகில் வைத்து எச்செயல் புரியினும் அச்செயல் நிழலில் அவ்வப்போது தோன்றும். அந் நிழல்போல அடியார் எண்ணிய செயல்களை அவ்வப்போது கூடவிளையாடி

முடித்தவர் என்பது குறிப்பு. "கையுங் காலுந் தூக்கத் தூக்கும், ஆடிப் பாவைபோல, மேவன செய்யும்" (குறுந் : 8) எனவும், "ஆடிப் பாவையோ டலர்நிழற் பாவை கைதான் மெய்பிறி தெனையும் பையயத் தூக்கிற் றூக்கி மேக்குயர் புயர்தல்" (ஞானமிர்தம் 6) எனவும் வருவன காண்க. வெயிலிற் றோன்றும் நிழற்பாவை எனவும் கொள்ளலாம். தேடரிய விளையாட்டு; எதிர் வந்த விளையாட்டு எனக் கூட்டுக. அறுபத்து நான்கு திருவிளையாடலையும் குறித்தது இது. பாண்டியனுக்குப் பழிவருமே என்று தான் அஞ்சி வானொலியாய் நின்று நிகழ்ந்த செயலுணர்த்தி நெறி தவறாமல் அரசு புரிவித்ததைக் குறித்தது "பழிக்கஞ்சி" என்ற பெயர் இனி மேலும் பழிக்கஞ்சியென்ற பெயரைப் பெற்றுப் புகழுடன் விளங்குவாய் என்பது குறிப்பு. ஆவலினுற் புக்கு வந்தார் என்றது, பவனி காணவந்த மங்கையரை: பொடி - சொக்குப் பொடி; - மயக்கும் பொடி. பொடிபோட்டு மயக்கினதுபோல மயக்கியது என்க. சொக்கலிங்கந்தான் மயக்கியதென்றே சொல்வார் என்க. இக்கு + அணைத்த - இக்கணைத்த - கரும்பினைப் பற்றிய. வேள் + தானே-வேடானே-மன்மதனே. தான் : அசை. கோட்டிகொளல்- துன்புறுத்துவது. கோட்டி - மயக்கம். கொளல் - கொள்வித்தல் எனப் பொருள்கொள்ளலும் ஆம். மன்மதன்தானே அரசாள விடுவது; காதல்கொண்ட மங்கையரைக் கூடாது மேலு மேலும் மயக்கத்துடன் வாடவிடுவது. காமன் போர் புரிய அவனைத் தடுக்காது விடுப்பது என்பது கருத்து. இது வல்லமையோ அன்று என்க. ஓகாரம் எதிர்மறை. காமனைத் துரத்தி இம் மங்கையைப் புரப்பதுவே வல்லமையாம் என்ற பொருளைக் குறிப்பிற் புலப்படுத்தியது இது.

**256 - 264 : கங்கையெலாம்......வாய்க்குமே**

(பொ - ரை.) கங்கை யாற்று நீரெல்லாம் நல்ல மையணிந்த கண்களின் நடுவே வருமாறு அருள் புரிந்தால் இந் நங்கை எல்லாம் வல்ல சித்தர் என்றழைக்க மாட்டாளோ! நல்லவர் போல் நடித்து மையணிந்த நீலமலர் போலும் கண்ணியின் வளையலைக் கவர்ந்து சென்று பின் மங்கையர்

தம் செங்கைக்குரிய வளையலாகக் கொண்டுபோய் விற்க முறையுண்டோ! எட்டுத்திசையாக வளர்ந்த தோளிலணிந்த மாலையும் வேப்ப மாலையாகி அம்மாலையைத் தொடர்ந்து தொடர்ந்து கேட்டவர்களும் வேம்புபோலாகி வெறுக்கும்படி கேட்டோமே! கண்ணிற் பொருந்துமாறு காமனை யெரித்த வனுக்கு இது தகுமோ? மங்கையர் தம் உடையைக் கவருந் தொழில் உனக்கு விடையாய் வந்த திருமாலிடத்திற் கற்றதோ! மீண்டு வராமல் சென்றுறைந்த நாரை அந்நாளிற் சென்றடைந்த சிவலோகத்தில் இந்நாள் இம்மங்கையை விடலாகாதோ? அன்றியும் தீமலையாய் நின்றவனே! விருத்தர் குமாரர் இளமையான பாலகர் என்று வடிவமாறி ஒருபெண்ணின் மனையில் தனியே இருந்தாய். முன் ஒரு நாளிற் பொன்னனையாள் மனையிற் புகுந்து இருந்தனை? தனியே பெண்ணிருக்கு மனையிற் புகுந்திருக்கலாம் எனின் எனக்குரிய பொன் போன்றவள் மனைக்கு வருவது பொருந்தாதோ? பொருந்தும் என்னும் சொற்களையெல்லாம் திருச்செவியில் ஏறும்படி கூறுவதற்கு நீதான் வல்லமை யுடையாய். உன்போல எடுத்துரைக்கும் சொல்லாற்றல் எவர்க்கு வாய்க்கும்! ஒருவர்க்கும் வாய்க்காது.

(வி - ம்.) கங்கை யெல்லாம் என்றது நீர்ப் பெருக்கை யுணர்த்தியது. நீர்ப் பெருக்கு நீங்காமல் கண் வழியே வருமாறு நீ அருள் செய்தால் என்பது, குறிப்பினால் இந் நங்கையைக் கண்ணீர் வடித்து அழுமாறு செய்தால் என்ற பொருளைத் தந்தது. எல்லாம் வல்ல சித்தர் என்றழையாள்: பொல்லாத சித்தர் என்றே புகல்வாள் என்க. குவளை - நலமலர். குவளைக் கண்ணி: உவமைத் தொகை. இவள் வளையலைக் கவர்ந்து மற்றை மங்கையர்க்கு விற்பது முறை யன்று, திக்குவளை - திசை போல வளர்ந்த என உவமைத் தொகையாக விரிக்க. சிவபெருமான் எண்டோளுடையவ ராதலின் அதனைச் சுட்டியதாம். தோள் + தாரும் = தோட் டாரும்-தோளில் அணிந்த மாலையும். மாலையும் சிறந்த மண மாலையன்று. வேப்பமாலை. அதனைத்தொடர்ந்து தொடர்ந்து கேட்டு வேம்பாகக் கசந்து வெறுத்தோம். நீ இன்னும்

மாலை கொடுத்தாயல்லை என்ற கருத்து வெளிப்பட்டது. எரித்தாய்க்கியல்போ என்பது மின்னாரைக் காதல் கொள்ளுமாறு செய்வது காமனை யெரித்த நினக்குத் தகாது என்றதாயிற்று. கலை கவர்தலை நீ நின் காளையிடத்தே கற்றும் போலும். கலை கவர்தல் - உடைகளைக் கவர்ந்து வைத்துக் கொள்வது. காளையாய் உன்னைத் தாங்கும் திருமால் முன் கண்ணனாய் ஆயர் பாடியில் வளர்ந்தபோது கோவியர்சேலைகளைக் கவர்ந்து சென்று குருந்த மரத்தில் ஒளித்தான். அச் செயலைக் கண்டு நீயும் இவள் கலையைக் கவர்ந்தாய் போலும். கலை கவர்தல்; காதலால் உடல் மெலிந்து உடை தானே கழன்று நழுவி விடுமாறு செய்தலை யுணர்த்தியது. காளை — மாடு; விடை. காளைப் பருவமுடைய ஆடவனையும் உணர்த்தும் இது. அந் நாரையிருக்கும் சிவலோகத்தில் இந் நங்கைக்கு இடமில்லையோ என்பது கருத்து. நாரைக்கு முத்தி கொடுத்த படலம் காண்க.

அழற்குன்றே-நெருப்பு மலையே. இது விளி. நெருப்பு மலையாகத் திருவருணையில் நின்ற திருவுருவைக் குறித்தது இது. விருத்த குமார பாலரான படலத்தில் இறைவர் கௌரி என்ற அடியாள் பொருட்டு விருத்தராகச் சென்று பின் காளைப் பருவமுடையவராகவும் பாலராகவும் மாறிய வரலாற்றை யுட்கொண்டது இது. ஒரு பெண் வீட்டிலிருக்கலாம் என்றால் இப் பெண் வீட்டில் வந்து தங்கியிருப்பதற்குத் தடையென்ன என்று கேள். பொன்னனையாள் என்பது திருப்பூவணம் என்ற பதியில் வாழ்ந்த ஒரு பரத்தையின் பெயர். அப் பொன்னனையாள் பொருட்டு இரச வாதஞ் செய்யும் சித்தராய்ச் சென்று தங்கி இரும்பு முதலிய உலோகங்களை யெல்லாம் தங்கமாக்கித் தந்தனர் என்பது வரலாறு. இரசவாதஞ் செய்த படலம் காண்க. என் பொன் அனையாள்- எனக்குரிய நண்புடைய திருமகள் போன்றவள்; இது காதல் கொண்ட தலைவியைக் காட்டியதாம். அவர்கள் வீட்டுட் புகுந்திருந்த உனக்கு இவள் வீட்டுட் புகுந்திருப்பது என் பொருந்தாது என்று கேள். இத்தகைய மொழிகளை யெல்லாம் கூறி யிடித்துரைப்பது யார்க்கும் வாயாது. தமிழாகிய உனக்கே வாய்க்கும் என்று விளக்கினள்.

264 - 268 : நல்லாள்..........தூது சொல்லி வா

(பொ - ரை.) நல்லவளும் திருவருள் விழியுடையவளும் ஆகிய அங்கயற்கண்ணியம்மையுடன் அடியார்கட்குத் திருவருள் செய்யும் பொருட்டு வாழ்ந்திருக்கும் தலைவர் சிறந்த மதுரை நகரமே சிவராச தானியென்று கருதி வீற்றிருந்தால் அது நாம் புரிந்த புண்ணியத்தின் செயலேயாகும். ஆதலால் பொன்னுலகத்தினும் மேலான மகிமையுடைய திருவாலவாயிலுறையும் சுந்தர பாண்டியன் நினது சொற்படியே வந்து எனைவிட்டுப் பிரியாதிருந்து கூடிக் கலந்து இன்பப் பேரானந்தத்தை நல்குமாறு என்னை மறவாமல் எனக்குரிய தூது சொல்லி மீண்டு வருக என்றாள்.

(வி - ம்.) நல்லாள், கருணைவிழியாள், அங்கயற்கண்ணி என்பவை ஒருபொருட் பெயர்கள். நல்லாள் என்றது உயிர்கட்கு நன்மை புரிவாள் எனவும் கருணைவிழியாள் என்றது அருட்கண்ணானோக்கி ஆட்கொள்பவள் எனவும் பொருட்பட்டு நின்றன. அழகிய கயல்போலுங் கண்ணுடையவள் என்பதே மீனாட்சி என்ற பெயர்ப் பொருளாம். மீன் + அட்சி = மீனாட்சி. மீனம் - கயல். அட்சி - கண்ணி. இது வடமொழித்தொடர்; தமிழில் வந்து வழங்குகிறது எனவுணர்க. கடவுள் அடியார்கட்குத் திருவருள் புரியும் பொருட்டே பல தலங்களிலும் கோயில்கொண்டு வீற்றிருக்கின்றார் என்பது அறிஞர் கொள்கை. பல அருட்செயல்கள் நிகழ்த்தியதும் நிகழ்த்துவதும் தெய்வக் கொள்கை சிறப்பதற்கே என்பதும் அறிஞர் கருத்து. சிவ + ராச + தானி = சிவராசதானி - சிவபெருமான் அரசுபுரிந்த தலைநகரம் என்பது பொருள். மதுரையைத் தமக்குரிய தலைநகரமாகக் கொண்டுவந்து வீற்றிருப்பது நாம் முன்னர்ச் செய்த புண்ணியத்தின் பயனேயாகும் என்பது கருத்து. "என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து, முன்ன நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள், மன்னு காவிரி சூழ்திருவலஞ்சுழி வாணனை வாயாரப், பன்னி யாதரித் தேத்தியும் பாடியும் வழிபடு மதனாலே" என்ற பாடலின் கருத்தும் நோக்குக. அந்தர லோகம் - மேலுலகம். இது பொன்

னுலகம் சுவர்க்கம் என்ற பொருளைத் தரும். சுவர்க்கத்தினு மேலான வின்பந் தருவது மதுரை யென்க. சுந்தரபாண்டியன் என்ற பெயருடன் வந்து அரசு புரிந்ததை விளக்கியது; சுந்தரமீனவன் என்ற சொற்றொடர். மீனவன்-பாண்டியன. மீனக் கொடியுடையவன் என்பது காரணம். மீனவன்+நின்சொற்படியே எனப் பிரித்துக் கொள்க. நீ தூதுசொல்லும் சொற்கள், சொக்கநாதர் வந்து என்னைக் கூடி எஞ்ஞான்றும் பிரியாதிருந்து இன்பப்பேறு நல்குதற் குரியவையாயும் தக்கவையாயும் அமைந்திருத்தல் வேண்டும் என்ற கருத்தினை யடக்கியுள்ளது; 'நின்சொற்படியே' என்ற சொற்றொடர், சுகம்+ஆநந்தம்=சுகாநந்தம். இது வடமொழிச் சந்தி; இன்பமகிழ்ச்சி எனப் பொருள் கொள்க. வா என்பது, மறந்து ஆங்குத் தங்கிச் சிவபெருமான் அன்பி லீடுபட்டிராதே என்பதை அறிவுறுத்தியதாம்.

மதுரைச் சொக்கநாதர்பாற் காதல் கொண்ட ஒரு தலைவியின் கூற்று இது, தமிழ்மொழியை ஓர் உயிர்ப் பொருள்போல் விளித்துக் கூறியதெனக் கொள்க. தமிழ் மொழியே! எனத் தலைவியழைத்துக் கூறுவதாகச் சொல் வருவித்துக் கொள்க.

தமிழ்மொழியே! என்னடிகளே (16) சங்கத்திருந் தோரும் (1 - 15) எல்லாரு நீயாயிருந்தமையால் போற்றி னேன் (16) பஞ்சி படாநூலே வந்தாய் (17 - 19) கருப்ப மாய் (20) பிறந்தாய் (22) வளர்ந்தாய் (25) மாப்பிள்ளை யாய் (28) பட்டத்துத் தோகையராய் (30) கல்யாணப் பாவையராய் (31) பிள்ளைகளைப் பெற்றுய் பெருவாழ்வு பெற்றுயே (32) மகிழ்ந்தாயே (34) பாவேந்தே நீ பெரிய பார்வேந்தோ (41) சக்கரவர்த்தியும் நீதானன்றே (46) சேனை தயங்க (48) வாழ்ந்தே (49) சொல்லும் மாலையும்...... பிள்ளைத் தமிழு முன்னும் பேராத பலகுரவர் மெய்காப்ப (50 - 60) காரியஞ் செய்யுங் கவிதையே (61) தமிழே (62) மூத்திக்கனியே வென்முத்தமிழே (69) விண்ணப்பமுண்டு விளம்பக்கேள் (70) மூன்றினத்து முண்டோ......வந்தாமோ (71 - 95) உன் செய்தி நானே யுரைசெய்வேன் (96)

வல்லேனே.......பெண்களெல்லாம் வாழப் பிறந்தமையா லென்மனத்துப் புண்களெல்லாம் மாறப்புரி (95 - 106) அன்னந்தான்.......உன்னுடனே கூறுகேன் (107 - 112) தொடைவாங்கி யுதவாயோ (114) விருதுடையார்க்கு நீ வேறோ சொக்கருனக் குள்ளன்றோ (114 - 123).

வடமொழியில்......சிலரே (124) சொல்லாதோ (126) விளம்பாதோ (127) தாராதோ (128) செப்பாதோ (129) போதாதோ (130) பகராதோ (131) அன்பாலென்றப்பாலு மாரறியார் (132) திருவாலவாயிருக்குஞ் செல்வர்...பரிக்கு முறையுள்ளார் (134 - 139) கோயிலும், மஞ்சனமும், பரிவட்டமும், பஞ்சவடியும், சந்தனமும், தண்மலரும், மாவடுவும், செந்திபழம் பூசை சமைத்து வணங்கத்தகுமோ (140 - 145) வைதாலும் வாழ்த்தாமே (150) வேணடேன் (151) கல்லானை தின்ற கரும்பானேன், சோ தாமரை யொத்தேன (152) வேண்டாவோ... ஆக்காமோ (154-166) பேசிவருக தூது பிறிதுண்டோ (169) உன் கையிலாகாத தொன்றுண்டோ (177) செவ்வழியே......எவ்வழி...இயம்பக்கேள் (179) அவர் பானீ மேவாதே...கூடாதே (189) புசிடாதே (195) நல்லார்கள தம்பாலிருந்து தரிததேகி...... கண்டுகளிகூர்ந்தே (198 - 207) தேவியுடனே யிருக்குஞ் சிவகாசதுள் எய்தி (218) திருத்தாளும்......சோதிமணி முடியும் (219 - 229) கண்டு களிகூர்ந்து (230) முடிமேற் சூடியே போற்றுவாய் நீயும் (245) மாமருந்தை (248) கண்மணியே, முழுமுதலே, செல்வமே, கோமானே, வாராதோ, வேண்டாவோ, சொல்லாதே, வல்லமையோ மாட்டாளே கணக்குண்டோ, கேட்டோமே, கற்றதோ, ஆகாதோ, இருக்கலாம், பொருந்தாதோ என்னுமொழி திருச்செவியிலேமும் படியுரைக்கவல்லாய் (249 - 264) எவர்க்கு வாய்க்குமே (264) ஆனமையால் (266) தூது சொல்லிவா (268) என்று வினைமுடிவு செய்க. தலைவியின் கூற்றாகவே முடிந்தது.

மதுரைச் சொக்கநாதர் தமிழ்விடுதூது நூலும்,
பண்டித வித்துவான் தி சங்குப்புலவர் எழுதிய
விளக்கவுரையும் முற்றுப்பெற்றன.

———